சமாஜ வெளியீடு.

உ

சிவமயம்

# மெய்கண்டாரும்
# சிவஞானபோதமும்

திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள், M. A., M. L.,
அட்வகேட்,
தலைவர், மணிவாசக மன்றம்,
திருநெல்வேலி.

சைவ சித்தாந்த மஹா சமாஜம்,
150, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு,
சென்னை.

ஆங்கிரச ௵ ஐப்பசி ௴
1932



விலை
ரூபா ஒன்று.

உ

சிவமயம்

# உரிமையுரை

---

தொண்டை மண்டலம் சோழமண்டலம்
என்றிரு நாட்டின் இடையே இலங்கும்
நடுநன் ஞட்டின் திலக மாகியும்
திருநாவ லூரர்க்குப் பேரருள் புரிந்த
அருட்டுறை முதல்வன் ஆலய முடையதும்
சைவ வேளாள மாண்பெரு வள்ளல்
சடையனு ரென்பார் இணையில் புகழொடு
திகழ்ந்து தீம்பா வேந்தன் கம்பற்
கருந்துணை யாதர வளித்த பதியாய்ச்
சிவநெறி முடிபின் தலைமை நாதன்
மெய்கண்ட ஞானக் கதிரவன் வளர்ந்த
அழியாப் பெருஞ்சீர்த் தலமு மாகிய
திருவெண்ணெய் நல்லூர் வதியும் பெருந்தகை
சீலம் அடக்கம் செம்மனப் பான்மை
வண்மை வாய்மை தமிழ்ப்பெரும் பற்று
சிவனடிப் பேரன் படியார் பத்தி
வாய்ந்த பண்பாளர் ஏய்ந்த பல்புகழ்ச்
சைவ சித்தாந்த மாபெரும் பேரவை
தம்பதி நடாத்திய தாவில் புகழார்
அண்ணு மலைக்கண் அருண கிரியார்
ஆலயம் பூசனை அமைத்த சிறப்பினர்
இந்நூல் வெளியிட முற்பொரு ளுதவிய
நலம்பல பொருந்திய நன்மை யாளர்
நுண்மாண் ஞானம் உடையோ ராதலின்
**சின்னசாமி** சிரேட்டப் பெயரார்க்குப்
பதியியை பானும் பல்லாற் றானும்
இந்நூல் பெரிதும் ஏற்புடைத் தாமே.

இங்ஙனம் :

**கா. சுப்பிரமணியன்.**

உ

சிவமயம்

# முன்னுரை

"பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித
மெய்கண்டநாதன் அருள் மேவுநாள் எந்நாளோ"

இச்சிறு நூலானது மெய்கண்ட தேவநாயனாரது வரலாற்றினை ஆராய்ச்சி முறையாக இயம்புகின்றது. சிவஞானபோதம் தமிழிலே முதல் நூலாக அமைந்திருப்பதற்குரிய காரணங்கள் இதனுள் தொகுத்துரைக்கப்பட்டுள்ளன. சிவஞான போதத்திற்கு ஒப்பற்ற பேருரையாக விளங்குஞ் சிவஞான பாடியத்தின் சாரமானது சுருக்கமாக இதனுள் விளக்கப்பட்டிருக்கிறது. சிவஞான போதத்திலுள்ள ஒவ்வொரு சூத்திரத்திற்கும் அதன் கருத்திற்கும் அதன் அதிகரணங்களிலுள்ள வாக்கியம், ஏது, உதாரணச் செய்யுள் என்பவற்றிற்குந் தெளிவான பொழிப்புரையுங் குறிப்புரையும் சிவஞானபோதம் தோன்றிய திருவெண்ணெய் நல்லூரின் சிறப்புஞ் சேர்க்கப்பட்டுள்ளன. இத்தகைய நூல், சிவஞானபோதக் கருத்தினை எளிதாயுந் தெளிவாகவுந் தெரிந்து கொள்வதற்குப் பெரிதும் பயன்படுமாதலின், இது சித்தாந்த மாணவர்களால் ஒரு தலையாகக் கற்கப்பெறுதற் குரியது.

இந்நூலை அச்சியற்றுவித்து திருவெண்ணெய் நல்லூரில் மெய்கண்டார் சந்நிதியில், அவர் திருநாளாகிய இன்று இதனை வெளியிட்ட சென்னை சைவ சித்தாந்த மகா சமாஜ அமைச்சர், திருவாளர் ம. பாலசுப்பிரமணிய முதலியார், பி. ஏ., பி. எல்., அட்வகேட் அவர்கட்குப் பெரிதுங் கடப்பாடுடையேன்.

ஆங்கிரசஹு ஐப்பசிமீ கஙஉ
சுவாதி நாள்
29—10—32.

கா. சுப்பிரமணிய பிள்ளை.

சிவமயம்

# திருவெண்ணெய் நல்லூரின் பெருமை*



அமிழ்தினுமினிய தமிழ் நூல்களுள் இப்போதுள்ளவை மூவகைப்படும். அவை தோத்திரம், சாத்திரம், இலக்கியம் என்பனவாம். இம்மூன்றனுள்ளும் தலைசிறந்து விளங்கும் நூல்களோடு பெருந்தொடர்புடையதும், தென்னாடுடைய சிவபெருமானது முக்கண் போன்று மிளிர்வதுமாகிய தனிப்பெருஞ் சிறப்புடையது **திருவெண்ணெய் நல்லூர்** என்ற திவ்ய க்ஷேத்திரமாகும். இந்தத் தலத்திலே சுந்தரமூர்த்தி சுவாமிகள், முதன் முதலாக இறைவன் அடியெடுத்துத்தர "பித்தா பிறைசூடி" என்ற தோத்திரத் தேவாரத்தையருளியதும், மெய்கண்ட தேவர் "சிவஞானபோதம்" என்ற சாத்திர முதனூலை அருளியதும், கவிச்சக்கரவர்த்தி கம்பர் "இராமாயணம்" என்ற இலக்கியத்தைத் தொடங்கிப் பெரும்பகுதியைப் பாடிமுடித்ததும் பழைய வரலாறுகளால் அறியக்கிடக்கும்.

இந்தத் தலம் திருமுனைப்பாடிநாடு, மலாடுநாடு, சேதிநாடு எனப் பழைய நூல்களில் கூறப்படும் நடுநாட்டிலுள்ள தேவாரப் பாடல் பெற்ற இருபத்திரண்டு சிவஸ்தலங்களுள் ஒன்றாகும். பெரிய புராணத்தில் மெய்ப்பொருள் நாயனார் புராணத்தில்,

" **சேதி நன்னாட்டு** நீடு திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின் வழிவரு **மலாடர்** கோமான்" என்றும்

ஷடி புராணம் தடுத்தாட்கொண்ட புராணத்தில்,

" கங்கையும் மதியும் பாம்பும் கடுக்கையும் முடிமேல் வைத்த
அங்கணர் ஓலை காட்டி ஆண்டவர் தமக்கு நாடு
..............................**திருமுனைப்பாடி நாடு**" என்றும்

"...கன்னர தேவர்க்கு யாண்டு 17-வது **முனைப்பாடித்** திருநாவலூர்த் திருத்தொண்டீஸ்வரத்து மஹாதேவற்கு......ஸ்ரீமத் நரசிம்மவர்ம்மா **மிலாடுடைய நாட்டான்** சித்தவடவன் ஆகிய நரசிம்மவன்மன் வைத்த விளக்கு..." (திருநாவலூரில் ஒரு கல்வெட்டு)—'மன்னியல் பசும் புரவி யேறியொரு கணமதில் வலம்வரும் புவியை நீயே மாமுடி கவித்தாள்க வென்றுமூ வேந்தரும் வாய்மலர்ந் தருள வாங்கே, மின்னுறு குணக்குக் கடற்கரை வரைக்குமிகு மேவுமலர் சோலைதெற்கு விளங்கு திருவாத்துறை வதிட்டக்குடி வெள்ளாறு மேற்றிசைக் கொல்லி மலையாந், தென்னியல் வடக்குப் புனற்றருங் கடியாறு செப்புமிந் நான்கெல்லையுள் **திருமுனைப்பாடி**நா டீதுசதுர் முடி

* இது திரு. தி. கு. கி. நாராயணசாமி நாயடு அவர்களுதவிய குறிப்பைக் கொண்டு திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரால் எழுதப்பட்டது.

பெற்றதெய்வீக மன்னனாண்ட, அங்கிலையில் சிங்கபுரி நன்னிலத் தரசுபுரி யருள்பெறுவ கந்தராயர் அண்ணாவி னிற்றுதிசெய் உண்ணா முலைக்குரிய அண்ணாமலைத் தேவனே'—(**திருஅண்ணாமலை சதகம்**) என்றும் வரும் ஆதாரங்களினால் இக்காட்டின் பல பெயர்களும் எல்லையும் நன்கு விளங்கும். இக்காடு சேர சோழ பாண்டியர் மூவர்க்கும் பொதுவாகவும் நடுவாகவும் இருந்தமையால் **நடுநாடு** எனப் பெயர் பெற்றது. இஃது புறநானூற்றில் பாரி முதலிய நடுநாட்டு வள்ளல் களைப்பற்றிய செய்யுள்களாலும் அவற்றின் உரையாலும் அறியலாகும். இக்காடு பலபோர் முனைகளைக் கண்டது. கடைசியாக கி. பி. 1760-ல் ஆங்கிலேயர் திருவெண்ணெய் நல்லூரில் முற்றுகை செய்து அதைக் கைப்பற்றியதாக **Orme** என்ற சரித்திர ஆசிரியர் கூறுகின்றனர். திருவெண்ணெய் நல்லூரில் இப்போதும் கோட்டைத் தெரு என்றொரு தெருவுண்டு.

இக்காட்டுக்கு நீர்வளனையும் நிலவளனையும் நல்குவது **பெண்ணையாறு**. இது தமிழ்நூல்களில் மிகச் சிறப்பாக வருணிக்கப்பட்டுள்ளது. இது பழைய காலத்தில் ஒரு வழியாகவும் இப்போது வேறொரு வழியாகவும் ஓடுகிறது. பழைய வழி இப்போது மலட்டாறு எனப்படுகிறது. நீரின்மையால் வரும் மலடுபற்றி மலட்டாறு என்றோ, மலாடு நாட்டு ஆறு ஆதல்பற்றி மலாட்டாறு திரிபுற்று மலட்டாறு என்றோ இது இவ்வாறு அழைக்கப்படுகின்றது. இம்மலட்டாறு என்ற பழம் பெண்ணை திருவெண்ணெய் நல்லூருக்கு வடக்கே கால் மைலில் ஓடுகிறது. புதிய பெண்ணையாறு இதற்கும் வடக்கே மூன்று மைலிலிருக்கிறது.

இனித் திருவெண்ணெய் நல்லூர் என்ற தலம், நிறைந்த பலநீர் நிலைகளையும், குளிர்ந்த பலசோலைகளையும், செழித்த பல புலங்களையும் உடையது. "மின் அமர் பொழில் சூழ் வெண்ணெய்" என்றார் அருணந்தியார். இங்கு உமாதேவியார் பசு வெண்ணெயினாற் கோட்டைகட்டி அதனிடையே பஞ்சாக்கினியை வளர்த்துத் தவம் புரிந்து சிவப்பேறெய்திய காரணத்தால் இவ்வூர் **திருவெண்ணெய் நல்லூர்** ஆயிற்று. இஃது வேலைய தேசிகரியற்றிய வீரசிங்காதன புராணத்துத் திருக்குடந்தைச் சருக்கத்திலுள்ள "ஆலகாலமண் டருந்திய நமைஉமை அறிவால், ஏலவே **பசு இழுதினாற் கோட்டை** செய்திடையே, சால ஐந்தழல் நாப்பணே தவம்புரிந் திடலான், மேலவாம் **திருவெண்ணெய் நல்லூர்** என விளங்கும்" என்ற செய்யுளால் அறியப்படும்.

பலதலங்களிலுள்ள திருக்கோயில்கட்குத் தனிப்பெயர்களுண்டு. ஆரூர்ப் பூங்கோயில், கச்சூர் ஆலக்கோயில்,கடம்பூர் கரக்கோயில், மீயச்சூர் இளங்கோயில், வைகன் மாடக்கோயில், கருவூர் ஆனிலை என்ற பெயர்களை நோக்குக. இஃதேபோல் திருவெண்ணெய் நல்லூர்க்

கோயிலுக்கும் **அருட்டுறை** (அருள்+துறை)என்ற தனிப்பெயருண்டு. சுந்தரமூர்த்தி சுவாமிகட்கு அருள் புரிந்தமையால் இப்பெயர் வந்த தாகச் சிலர் கருதுகின்றனர். இது தவறு. சுந்தரமூர்த்தி சுவாமி கட்கு இருநூறாண்டு முற்பட்டவராகிய திருநாவுக்கரசு சுவாமிகள் "பெண்ணை **அருட்டுறை** தண் பெண்ணாகடம்" என்று க்ஷேத்திரக் கோவைத் தாண்டகத்தில் கூறியுள்ளார். உமையம்மையாருக்கு அருள்புரிந்தமையால் அருட்டுறையாயிருத்தல் கூடும். திருநாவுக்கரசு சுவாமிகள் இவ்வூரில் தேவாரம் பாடியதாகப் பெரிய புராணம் கூறு கின்றது. "திருவதிகைப்பதி மருங்கு **திருவேண்ணெய் நல்லூரும்** ......மருவு திருப்பதி பிறவும் **வணங்கி வளத்தமிழ்பாடி**........." என் பதை நோக்குக. இப்பதிகம் கிடைத்திலது.

இத்தலத்து விநாயகர் பொல்லாப் பிள்ளையார் என்பார் (பொல்லா=பொள்ளாத=உளியாற் பொளியாத=சுயம்பு.) இவர் சிவஞானபோதச் சூர்ணிக்கொத்து அருளியதாக ஆன்றோர் சிலர் கூறுவர். இது பொல்லாப் பிள்ளையார் அருளியதல்ல வென்றும் சுவாமிநாத தேசிகர் என்பார் இயற்றியதென்றும் உயர்திரு - மறை மலையடிகள் கூறுகின்றார்கள். இத்தலத்து சுவாமி பெயர் வடமொழி யில் கிருபாபுரீசுவரர் என்பது. பழைய கல்வெட்டுக்களில் தடுத்தாட் கொண்ட தேவர் என்றிருக்கிறது. உமாபதி சிவமியற்றிய சிவக்ஷேத் திர சிவநாமக் கலிவெண்பாவில் சுவாமி பெயர் தடுத்தாட் கொண்ட தேவர் என்றும், தேவி பெயர் வேற்கண்மங்கை யென்றும் காணப் படுகின்றன.

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் சடையனாருக்கும் இசை ஞானியாருக்கும் தவப்புதல்வராக நம்பி ஆரூரர் பிறந்து நரசிங்க முனையரையர் என்ற அரசரால் அன்புடன் வளர்க்கப்பெற்று (மணந் தவிர்ந்த) புத்தூரில் திருமணம் செய்துகொள்ளும்போது சிவபெரு மான் ஒரு கிழ அந்தணர் வடிவு பூண்டு வந்து " இம்மணமகன் எனக்கடிமை. இவன் மணம் செய்யலாகாது. வேலை செய்தல்வேண் டும். இவன் தந்தையின் தந்தைஎழுதிக்கொடுத்த அடிமை யோலை என்னிடம் உள்ளது" என்றார். இதைக்கேட்ட நம்பியாரூரர் "அந்த ணர்க்கு அந்தணன் அடிமை ஆதல் இல்லை. பித்தனே, என் இவ் வாறு கூறுகிறாய்" என்றார். கிழவர் "பித்தனும் ஆக, பேயனும் ஆக, வித்தகம் பேசவேண்டாம் பணிசெய்யவேண்டும்" என்றார். நம்பியாரூரர் கிழவரிடமிருந்த ஓலையைக் கிழித்தெறிந்தார். கிழவர் "இவன் கிழித்தது படியோலை. மூலஓலை திருவெண்ணெய் நல் லூரில் என்னிடமுள்ளது. அதைக் காட்டுவேன்" என்றார். அனை வரும் புத்தூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூரை யடைந்தார்கள். ஆங்கு மறைக்கிழவர் அந்தணர் பேரவையில் தமது வழக்கையுரைத்த னர். அவையினர் "ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்றயலார் தங்

கள் காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்" என்று கட்டளையிட்டனர். கிழவரும் மூலவோலையைக் காட்ட, அதிலிருக்கும் கைச்சாத்து, வேறு உண்மைக் கைச்சாத்தோடு ஒப்பு நோக்கப்பட்டது. அவையினர் மூலவோலை உண்மை யோலை யென்றும், நம்பியாரூரர் வெண்ணெய்நல்லூர்ப் பித்தனுக்கடிமை யென்றும், அவன் ஏவல் செய்தல் கடன் என்றும் பணித்துத் தங்கள் ஊரில் கிழவரது மனையும் நீடு வாழ்க்கையும் காட்டுமாறு விரும்பினர். "வாருங்கள்" என்றழைத்துச் சென்று மறைக்கிழவர் திருவருட்டுறை ஆலயத்தின் மறைந்தனர். அவையினர் திகைத்து நின்றார். நம்பியாரூரர் தொடர்ந்தழைப்பக் கிழவர் ஆகாயத்தில் விடைமேற் காட்சியளித்து "நமது பழைய தொண்டனாகிய நீ இவ்வுலகில் நம் ஏவலாற் பிறந்தனை. நாம் தடுத்து ஆட்கொண்டோம். நீ வன்மை பேசி வன்றொண்டன் என்னும் நாமம் பெற்றாய். நம்மைச் சொற்றமிழ்பாடு" என்று அசரீரியாக அருளினார். நம்பி "நாயேன் யாதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்" என்ன இறைவன் "முன்பெனைப் பித்தன் என்றே மொழிந்தனை ஆதலாலே என்பெயர் பித்தன் என்றே பாடுவாய்" என்றனன். நம்பியாரூரர் என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளும்,

"பித்தா! பிறைசூடி! பெருமானே! அருளாளா!"

எனத் தொடங்கும் தேவாரப் பதிகத்தைப் பாடியருளினார்.

இவ்வரலாற்றுக்கு ஆதாரவாகத் திருவெண்ணெய் நல்லூர் ஆலயச் சுவர்களிலுள்ள கல்வெட்டுக்களில் "தடுத்தாட் கொண்ட தேவர், ஆவணங்காட்டி யாட்கொண்டான், விருத்தவேதியன், பித்தன், பிச்சன் என்று பாடச் சொன்னான், வழக்குவென்ற திருவம்பலம்" என்ற குறிப்புக்கள் உள்ளன. சிவபெருமான சந்நிதிவாயிலுக்கு மேலே இடப வாகனாரூட மூர்த்தமும் கற்சிலையில் அமைக்கப்பட்டுள்ளது. திருவெண்ணெய்நல்லூருக்குச் சமீபத்தில் தடுத்தாட்கொண்டஊர் மணம் தவிர்த்த புத்தூர் என்ற ஊர்களுமுள்ளன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்திலேயே,

அடக்கங்கொண்டு ஆவணங்காட்டிநல்
வெண்ணெயூர் ஆளுங்கொண்டார்...17, 10
அன்று வந்தெனை அகலிடத்தவர்
முன் ஆளதாக வென்று ஆவணங்காட்டி
நின்று வெண்ணெய்நல்லூர் மிசைஒளித்த நித்தில்த்திரள் 62,5
வெண்ணெய் நல்லூரில், அற்புதப்பழ ஆவணங்காட்டி
அடியனாய் எனை ஆளதுகொண்ட, நற்பதத்தை...68, 6.

என்ற அகச்சான்றுகள் உள்ளன.

இனி, "சிவஞான சித்திக்குமேல் சாத்திரமில்லை" எனப் புகழப்படும் சிவஞான சித்தியார் என்ற சிறந்த சாத்திர நூலுக்கு முதல்

நூலாக விளங்குவது **"சிவஞானபோதம்"** என்பது. இதன் ஆசிரியராகிய **மெய்கண்டதேவ நாயனர்** "சித்தியார்" ஆசிரியராகிய அருணந்தி சிவாசாரியாருக்கு ஞானோபதேசம் செய்த ஞான குருவாவார். மெய்கண்டதேவர் சிவானுபூதி கூடிச் "சிவஞானபோதம்" திருவாய் மலர்ந்தருளியது இத்திருவெண்ணெய் நல்லூரிலே யாம். இதன் விரிவை இந்நூலிற் காண்க. சிவஞானபோதத்தின் சாரமும் விரிவுரையும் இந்நூலுள் வெளிவந்துள்ளன. இவரது காலத்தைப்பற்றிய கட்டுரை, கல்வெட்டுக்களைக் கீழே காண்க. இவர் சந்நிதி வடக்கு வீதியில் வடமேற்கு மூலையிலுள்ளது.

திருவெண்ணெய் நல்லூரில் கி. பி. 12-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் (அதாவது மெய்கண்டார் காலத்துக்கு நூறாண்டுகள் முன்னர்) **சடையப்பவள்ளல்** என்ற வேளாளத் தலைவர் ஒருவர் இருந்தார். இவர் கம்பருக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்து அவர் இராமாயணம் பாடுதற்குப் பெரிதும் துணை செய்தார். கம்பர் தெய்வத் திருவருள் பெற்றுப் பாடிய "மோட்டெருமை வாவிபுக" என்றமுதற் செய்யுளிலும் சடையப்பவள்ளலைச் "சரராமன்" என்று புகழ்ந்தார். சடையப்ப வள்ளல் பொருளுதவியைக்கொண்டு கம்பராமாயணத்தின் பெரும் பகுதி திருவெண்ணெய் நல்லூரிலேயே பாடப்பட்டு எட்டிலும் பதியப்பட்டது. "ஏரெழுபது" என்ற நூலும் இவ்வூரில் இவர் முன்னிலையில் கம்பரால் அரங்கேற்றப்பட்டது. கம்பர் சடையப்பரை இராமாயணத்துள் பத்து இடங்களில் வைத்துப் பாடியுள்ளார். அவற்றுள் சில, வெண்ணைவாழ் கண்ணன் (=கர்ணன், கொடையன் - அல்லது புலவர்க்குக் கண்போன்றவன்), வெண்ணைச் சடையன், கொடைமீளி யண்ணல் சரராமன் வெண்ணை யணுகும், வள்ளற்சடையன், வெண்ணைமன் சடையன் என்பனவாம். இவரையே சோழமண்டல சதகம் புதுச்சேரிக் கொடையன், புதுவைச் சடையன், வெண்ணைத் திரிகர்த்தன், திரிகர்த்தராயன் என்று புகழ்ந்து கூறுகிறது. இவரது தகப்பன் பெயர் சங்கரன் என்று ஷெசதகமும் பிறநூல்களும் கூறுகின்றன. இவர் ஒருகாலத்தில் தமிழ் மூவேந்தர்க்கும் அவர்கள் பரிசனங்கட்கும் பெரு விருந்தளித்து அவர்களால் **திரிகர்த்தராயன்** என்ற சிறப்புப் பெயர் சூட்டப் பெற்றார். ஈழ நாட்டில் ஓராண்டில் பஞ்சம் வந்தபோது அந்நாட்டரசன் பராரச சிங்கப் பெருமான் என்பான் இவ்வள்ளலுக்குச் சீட்டுக்கவி யனுப்பி இவருதவியை நாட, இவர் ஆயிரம் கப்பல்நிறைய நெல்லனுப்பி உபகரித்தார். தானிய ஏற்றுமதித் தொழிலில் புதுச்சேரிக் கடற்றுறையிலும் இவர் சிறப்புற்றிருந்தார். இவர் நாடோறும் ஆயிரம் புலவர்கட்குப் பாலுஞ் சோறும் அளித்த வள்ளலாவார். இவருக்குச் சோழநாட்டிலும் மிகப் பெரிய காணிவளமும் திருவியலூரில் சில்கால உறைவிடமும் இருந்தன. இவைகளைமட்டும் ஆதாரமாகக்கொண்டு சிலர் திருவெண்ணெய்

நல்லூரென்பது மாயவரத்துக் கருகிலுள்ள குற்றாலம் ரயில்வேஸ்டே ஷனுக்கு வாயு மூலையிலுள்ள ஒரூரென்றும், சடையப்ப வள்ளல் சோழநாட்டினர் என்றும் கூறுகின்றனர். இது தவறு.

எட்டுத் திசையும் பரந்த நிலாவெறிக்கும் கீர்த்தியே ருழுவர்
சட்டப் படுஞ்சீர் **வெண்ணெய் நல்லூர்ச் சடையன் கேடிலன்** சரித
ஒட்டிப்புகழ ஆயிரநா வுடையார்க்கன்றி யொருநாவின் [மெலாம்
மட்டுப் படுமோ **அவன்காணி வளர்** சேர் சோழ மண்டலமே.

> புரந்தர தாரு **புதுவைச் சடையன்**
> **இருந்த வியலூர்** தென் மேற்கு—பரந்தபொன்னி
> ஆற்றுநீ ரால்விளையும் அப்பாற் கிழக்கரிசி
> மாற்றுநீ ரால்விளையு மாம்.

என்ற சோழமண்டல சதகச் செய்யுட்களி லிருந்து **புதுவைச் சடையன், வெண்ணெய் நல்லூர்ச் சடையன், கேடிலன்** எனப் புகழப்படுவோர் நடுநாட்டின ரென்பதும் அவருக்குக் காணிவளம், சில்கால இருக்கை முதலியன சோழநாட்டி லிருந்தன வென்பதும் புலனாகும். இதனை வலியுறுத்த வேறுபல மேற்கோள்களும் உண்டு. மூவேந்தர்க்கும் ஒருங்கே விருந்தளித்து திரிகர்த்தராயன் என்ற பட்டம் பெற மூவர்க்கும் பொதுவாய நடுநாட்டினர் ஒருவர்க்கே கைகூடும் என்பது வெளிப்படை. இவரைப்பற்றிய விரிவான ஆராய்ச்சியை "செந்தமிழ்" மூன்றாந் தொகுதியில் திரு. ரா. இராகவையங்கார் எழுதிய "கம்பர்" என்ற கட்டுரையிற் கண்டுகொள்க. கம்பர் தாம் உயிர்விடுந் தருவாயில் பாடிய பாட்டிலும் சடையப்ப வள்ளல் பெயரையும் அவரது நன்றியையும் மறவாது கூறியுள்ளார்.

அருணகிரிநாத சுவாமிகள் திருவெண்ணெய் நல்லூரி லுள்ள முருகக் கடவுள் மயில்மீது நடம் புரிதலைக் கண்குளிரக் கண்டு திருப்புகழ் ஒன்றும் திருவாய் மலர்ந்துள்ளார். திருநாவலூர்ப் புராண ஆசிரியர் இராசப்ப நாவலர் இவ்வூருக்கும் ஒரு கலம்பகம் செய்துள்ளார்.

---

# திருவெண்ணெய்நல்லூர் ஆலயத்திலுள்ள கல்வெட்டுக்கள்

க. 423/21. இதில் **திருமுனைப்பாடி நாட்டுத் திருவெண்ணெய் நல்லூர் தடுத்தாட்கொண்ட தேவர்க்குக்** கூடல் ஆளப்பிறந்தான் அரசநாராயணன் என்ற காடவராயன் சில கிராமங்களின் வரிகளைத் தானம் செய்தது கண்டிருக்கிறது.

உ. 430/21 ஜடாவர்மன் வீரபாண்டியன் 5-ஆண்டு 12-11-1301 **தடுத்தாட்கொண்டநாயனூர்க்கு** சந்தவனம் வைப்பதற்காக 25-பணத்திற்கு விக்கிரமபுரத்து ஊராருக்கு 500 குழி நிலம் விற்றது.

௩. 431/21. கோப்பெருஞ் சிங்கன்-27-ம் ஆண்டு-28-3-1268. செஞ்சியைச் சேர்ந்த ஒரு மத்யஸ்தனை உடையான் ஸ்ரீகைலாய முடையான் என்பவன் திருவெண்ணெய்நல்லூர் ஆட்கொண்டதேவர்க்கு **'பிச்சன் என்று பாடச்சொன்னான்'** என்ற பெயருடைய இரண்டு வெள்ளி முரசும், ஒரு பொன் கால்காறையும் தானம்செய்தது.

௪. 435/21. இராஜராஜ தேவர் 5-ம் ஆண்டில் ஆட்கொண்ட தேவர் சந்தி விளக்குக்காக **ஆலாலசுந்தரப் பெருந்தெருவில்** வசித்த ஒருவன் 4-பசுதானம் செய்தது.

**௫. 437/21. தேவாரம் ஓதிக்கொண்டு திருவிழாக்களில் தெரு வழியாகப் போதும் உரிமைகளின் பொருட்டு ஒரு சண்டையில் உயிர் துறந்த** திருப்பூவண முடையார் இலங்கேசுவரனுக்கு வெண்ணெய்நல்லூர் கைக்கோளர்கள் பெருமான் **ஆலாலசுந்தரப் பெருமான்** கட்டளையின்படி திருச்சின்னம் முழக்க சிறுமுறி தந்தது ருதிரோத்காரி வைகாசி 22-தேதி. அரசன் பெயரில்லை.

௬. 441/21. குலோத்துங்கசோழன் 29-ஆண்டு **"வழக்கு வென்ற திருவம்பலம்"** என்ற கல்மண்டபம் கட்ட சில குடிகளுடைய வீடுகளை எடுத்துக் கொண்டு வேறு இடம் தந்தது. (இதுகோயில் பிராகாரத்தில் வடகிழக்கு மூலையிலுள்ள மண்டபம்போலும்)

௭. 446/21. கோயில் அதிகாரிகள் சூரிய நாராயணன் என்பானுக்குத் தடுத்தாட்கொண்ட நல்லூர், செங்காடன் குளத்தூர் என்ற ஊர்களை விற்றது.

௮. நடராஜர் வீற்றிருக்கும் அறையின் வடசுவரில் அடிவரியில் ஒரு சாசனம் சுந்தரர்க்காகவெட்டப்பட்டுள்ளது. இதனைப்படியெடுத்துள்ளோம். அதில் சில முக்கியமான வரிகள் வருமாறு; **நாச்சியாரோடும் பூசைகொண்டருளுகிற ஆளுடைய நம்பிக்கு அமுதுபடி யுள்ளிட்ட நிமந்தங்களுக்கு உடலாக நாங்கள் இவ்வாளுடையநம்பி ஸ்ரீ கரத்திலே நீர் வார்த்த நிலமாவது** * * * * இந்நிலம் **அரைவேலி**யும் இவ்வாளுடைய நம்பிக்கு வேண்டும் அமுதுபடி உள்ளிட்ட நிமந்தங்களுக்கு உடலாகக் கொடுத்த இந்நிலம் * * * இப்பரிசு சந்திராதித்தர் வரை செல்லக்கடவதாக சம்மதித்து இவ்வாளுடைய நம்பி ஸ்ரீகரத்திலே நீர்வார்த்து சிலாலேகை பண்ணிக் கொடுத்தோம். * * இத்தேவர்க்கு யாண்டு கரு-வது (ராஜாதிராஜதேவர் ?) இவ்வூர்க் களத்தூர் சிறிய நம்பி * * இவ்வூரில்**பூசை கொண்டு அருளுகிற ஆளுடைநம்பிக்கு அடைக்காயமுதும் இலையமுதும்** செல்வித்தாக பூர்வமாக தானம் பண்ணிக்கொடுத்திட்டநிலம்.* *

இக்கோயிலில் சில பாடல்களும் செதுக்கப் பட்டுள்ளன. அவற்றுள் பித்தன், விருத்த வேதியன், ஆவணங்காட்டி யாட்கொண்டான் என்ற குறிப்புக்கள் உள்ளன.

# திருவெண்ணெய் நல்லூர் திருப்புகழ்

பலபல தத்துவ மதனை யெரித்திருள்
பரையர ணப்படர் வடவன லுக்கிரை
படநட நச்சுடர் பெருவெளி யிற்கொள விடமேவிப்-
பவன மொழித்திரு வழியை யடைத்தொரு
பருதி வழிப்பட விடல்கக னத்தொடு
பவுரி கொளச்சிவ மயமென முற்றிய பரமூடே;
கலகலெ னக்கழல் பரிபுர பொற்பத
வொலிமலி யத்திரு நடன மியற்றிய
கனக சபைக்குளி லுருகி நிறைக்கட' ஒழுகில்மூழ்கிக்-
கவுரி மினற்சடை யாளொடு நித்தமொ
டனக சகத்துவம் வருதலு மிப்படி
கழிய நலக்கினி திறமென விற்றுட னருள்வாயே;
புலையர் பொடித்தளும் அமண ருடற்கலை
நிறையில் கழுக்களி லுறவிடு சித்திர
புலவனெ னச்சில விருது படைத்திடு மிளையோனே-
புனமலை யிற்குற மகளய லுற்றொரு
கிழவ னெனச்சுனை தனில்வளைப்புய
புளகித முற்றிபம் வரவணை யப்புணர் மணிமார்பா;
மலைசிலை பற்றிய கடவு ளிடத்துறை
கிழவி யறச்சுக குமரி *தகப்பனை
மழுகொடு வெட்டிய நிமலிகை பெற்றருள் முருகோனே-
மகிழ்பெணை யிற்கரை பொழில்முகில் சுற்றிய
திருவெணெய் நற்பதி புகழ்பெற அற்புத
மயிலின் மிசைக்கொடு திருநட மிட்டுறை பெருமானே.

---

## திருவெண்ணெய்க் கலம்பகம்

### நேரிசை ஆசிரியப்பா

இல்லற வியற்கைத் தொல்லுல கறிய
இளங்கொடி யொருபால் விளங்க வீற்றிருந்தும்
துறவற மிஃதென் றறவர் நன்குணர
ஏகமாய் நின்று மநேக சீவரிலுங்
கலந்துங் கலவா திலங்கு செஞ்சுடரே!
விண்வளி தீநீர் மண்ணுளொன் றிரண்டு
மூன்று நான் கைந்தாய்த் தோன்றிய பரமே!
யாவரு மெமது தேவனென் றுன்னத்து

*தக்கனை வீரபத்திரரால் மழுக்கொண்டு வெட்டுவித்த நின்மலி.

அமைவுற மூவிரு சமையமும் வகுத்தாங்கு
அவையிடை விளங்கு நவையறு வாமீந்து
அருள்புரி யிறைவ! நிருமலச் சொருப!
ஐந்தொழி லியற்று மந்திரப் பொருளே!
இருவினைக் கடலுக் கொருபெரும் புணையே!
வாக்கொடு மனமுந் தாக்கருஞ் சிவமே!
நீறணி பவருள் ளூறிய வமுதே!
அப்பனே! யாவு மொப்பிலா மணியே!
வேண்டற் குரிய மாண்டவப் பேறே!
அவனவ ளதுவென் றுவமையின் முதலே!
முதலிடை யீறிர கிதமறைப் பொருளே!
ஐயனே! கருணை பெய்யுமா முகிலே!
விரும்பிய வளிக்கும் பெருங் கற்பகமே!
மூவா விமலா! தேவா திபனே!
காண்டற் கரிய தூண்டா விளக்கே!
புண்ணிய பலன்செய் பெண்ணைத் தென்பால்
வெண்ணெயம் பதியி னண்ணிய பிரானே!
காம மார்ச்சரிய மாமத மோகங்
குரோத முலோபம் விரோத மிடம்பம்
நடுநிலை யின்மைக் கொடுமையா தியவாம்
பொல்லா வியற்கை யெல்லாம் பொதிந்த
உருவெடுத் துன்றன் றிருவடி மறந்த
நாயினுங் கடையனைத் தாயினு மன்பாய்
அற்புத நல்கு நிற்புகழ் பாடப்
பணித்த நின்கருணை யெனிற் கரையின்றால்
இவ்வண மினுமுன் செவ்வணம் புகழ்ந்தாங்கு
ஈறிலாப் பருவ மாறிமாறி வருங்
கண்ணிமைப் போலு மெண்ணரும் பிறவி
எடுத்தீண்டு ழல்வது விடுத்து மாறாத
நவிலரு மின்பச் சிவகதிச் செல்வ
எளிதிற் பெற வுன்னுளங் கூர்ந்து
அருள் புரிவஃதும் பெரிது நின்கடனே. (௪௰-வது செய்யுள்.)

—இராசப்ப நாவலர்.

## மெய்கண்டதேவர் கல்வெட்டும் காலமும்

இது திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசுவரர் கோயில் முதற் பிரகாரத்து வடசுவரி லுள்ளது. 1902௵த்திய 485 நெ. சாசனமாக கல்வெட்டிலாகா அதிகாரிகளால் குறிக்கப்பட் டுள்ளது. ஷெ இலாகா

அதிகாரிகளின் அனுமதியின்பேரில் இங்கு வெளியிடப் படுகிறது. கல்வெட்டிலுள்ள எழுத்துப் பிழைகள் திருத்தப்பட்டுள்ளன.)

ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனசக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜதேவர்க்கு யாண்டு ௩௯-வது ரிஷபஞாயிற்று இருபத்தெட்டாந் தேதியும் சனிக்கிழமையும் பெற்ற மிருகசீரிஷத்துநாள் உடையார் திருவண்ணாமலையுடைய நாயனார் கோயில் ஸ்ரீ மாஹேசுவரக் கண்காணி செய்வார்களும் தேவர்கன்மி கோயிற் கணக்கனும் திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்டதேவன் ஊருடையபெருமாளான எடுத்தது வலிய வேளார்க்குக் கல்வெட்டிக் கொடுத்த பரிசாவது: இந்நாயனார் தேவதானஞ் செங்குன்றநாட்டு மாத்தூரான இராசராசநல்லூரில் இவர் வெட்டுவித்த மெய்கண்டதேவப் புத்தேரிக்கு கடமையிறுக்குமிடத்துத் திருத்தின ஆண்டு குழி நாழியும் பாடிகாவலுங் கொள்ளக் கடவதாகவும். இதன் எதிராமாண்டு கால்வரிசையும் பாடிகாவலும் இறுக்கக்கடவ தாகவும். இதன் எதிராமாண்டு முதல் காலேஅரைக் கால் வரிசையும் பாடிகாவலும் உட்பட வேலி எண்பதின் கலம் இறுக்கக் கடவதாகவும். இவ்வேந்தலுக்கு எல்லை அரசுக்குக் கிழக்கு நீரோடின நிலம் திருத்திப் பயிர் செய்யக்கடவதாகவும். இவ்வேந்தலுக்குப் புஞ்சைநிலம் அரசுக்குக்கிழக்கு, திருக்கோவலூர்பெருவழிக்கு வடக்கு. இவ்வேந்தலைச்சூழ்ந்த நிலத்திலே ஐந்துவேலிதரை எல்லையாய்ப் பண்டாரத்துக்குக் கடமை இறுக்கக்கடவதாகவும். இவ்வேந்தலில் திருத்தப் பட்ட நிலத்திலே இவ்விராசராசநல்லூரில் எழுந்தருளுவிக்கிற உடையார் மெய்கண்டீசுவரமுடைய நாயனார்க்கு பூசைக்கும் அமுதுபடிக்கும் மூன்றில் ஒன்று தேவதானமாவதாகவும். இவ்வேரிக்கு ஏரிப் பட்டி மன்றாட்டுப்பட்டியமாக ஐஞ்ஞூறு குழி விடக்கடவதாகவும். இவ்வேந்தல் தம் பொருளிட்டு வெட்டுகிற நிலம் இவ்வேரியும் நிலமும் குடிநீங்கா தேவதானமாய் இவர்க்கு சந்திராதித்தர் வரையும் காணியாய் விற்றொற்றிப் பரிக்கிரகஞ் செல்லக்கடவதாகவும். இப்படி சம்மதித்துக் கல்வெட்டிக் கொடுத்தோம் இவ்வனைவோம். இது பன்மாஹேஸ்வர ரக்ஷை.

குறிப்பு:—மெய்கண்டான் யாண்டு ஐப்பசியில் தொடங்குவதாகவும், முதலாண்டு கி. பி. 1222-ல் தொடங்கியதாகவும் கூறும் வழக்கமொன்று தமிழ் நாட்டில் சில காலமாகவுளது. அதன்படி நிகழும் ஆங்கிரச ஆண்டு ஐப்பசியில் மெய்கண்டான் யாண்டு 710 ஆரம்பமாயிருக்கிறது. உமாபதி சிவாசாரியார் சங்கற்ப நிராகரணத்தில்,

"எழுஞ் சிறுநூறு எடுத்த ஆயிரம் - வாழுநற் சகன மருவா நிற்ப"

என்கிறார். இது சாலிவாகன சகாப்தம் 1235 அல்லது கி. பி. 1313-ம் ஆண்டைக் குறிப்பதாகும். மேற் கூறிய கல்வெட்டு, உமாபதி சிவம் செய்யுள் ஆகிய இரண்டையும் ஆதாரமாகக்கொண்டு காலஞ் சென்ற

கல்வெட்டு நிபுணர் திரு. து. அ. கோபிநாதராயரவர்கள் "செந் தமிழ்" - ௩-ம் தொகுதி 189,190-ம் பக்கங்களில் கீழ்வருமாறு கூறி யுள்ளார் :—

"இச்சாஸநம் திரிபுவன சக்கரவர்த்திகள் ராஜ ராஜதேவர் II ஆட்சியில் 16-வது வருஷத்தில் இக்கோயிலிற் பதிப்பிக்கப்பட்டது. இவ்வரசன் கி. பி. 1216-ல் பட்டம் பெற்றான். ஆகவே இச்சாஸ நத்தின் காலம் 1232 கி. பி. என்பது பெறப்படும். இச்சாஸநத்திற் கண்ட மெய்கண்டதேவனே சந்தான குரவருள் முதல்வரான மெய் கண்ட தேவர் என்பார் என்பது எந்துணிபு. ஆயின், இவரேன் இச் சைவாசாரியர் பெயர் பூண்ட வேறொருவராயிருக்கக் கூடாது என் னும் சங்கை யுண்டாகலாம். அதற்குச் சமாதானம் கூறுவோம். கி. பி. 1232-ல் சைவாசாரியாராகிய மெய்கண்ட தேவர் பெயர் பிர பலப்பட்டிருந்ததென்று கொண்டு அப்பெயர் படைத்தவன் இச் சாஸனத்திற் கூறியவன் எனில், இவன் விக்கிரக ஸ்தாபனம் பண்ண வும், அதற்குத் தானங்கள் செய்யவும் உத்தேசம் 30 வயதுள்ளவனா யிருக்கவேண்டும். இவனுக்கு முந்தி யிருந்தவர் பிரபல மடைந்திருந் தார் எனின், அவர் ஏதேனும் இவனுக்கு 50-60 வருஷங்களுக்கு முன்னாகிலும் இருந்திருக்கவேண்டும். ஆதலால் இவர் காலம் சற்றே றக்குறைய கி. பி. 1150 ஆகவேண்டும். அப்பொழுது இவருக்கும் உமாபதியாருக்கும் இடையில் சுமார் 165 வருஷங்களாயிருக்க வேண்டுமென்று பெறப்படும்.

தகப்பன் பிள்ளை முறையில் வரும் பரம்பரையிலே சாதாரண மாக ஒவ்வொருவருக்கும் 30 வருஷம் கொடுக்கில் போது மென்றி ருக்க, ஆசாரிய சிஷ்ய பரம்பரையில் அவ்வாறு 30 வருஷம் கொடுப் பினும் இவ்விருவர்க்கு மிடையில் 120 வருஷங்களுக்கு மேற்படாது. ஆயின் மேற் கண்டபடி இவ்விருவருக்கும் இடையில் 165 வருஷம் சென்றிருக்க வேண்டுமென்று பெற்றது ஏற்காது. இவ்வாபாசம் நேர்ந்ததற்குக் காரணம் சாஸநத்திற் கூறியவனும் சைவாசாரியரும் தனித்தனி என்று கொண்டதனால் என்பது தெள்ளிதினுணரப் படும். அப்படிக் கொள்ளாது இருவரும் ஒரே மனிதர் என்று கொள் ளின் இது நேராது. இருவரும் ஒருவரே என்று துணிய இருவரும் திருவெண்ணெய் நல்லூருடையார் என்பது ஒருவாறு பயன் கொடுக் கிறது. ஆதலால் இவ்விருவரும் ஒருவரே என்று கொள்ளின் மெய் கண்டதேவர்க்கு ஊருடைப் பெருமாள் என்றும் எடுத்தது வலிய வேளார் என்றும் இரு மறு பெயர்களிருந்திருக்கவேண்டும் என்பது பெறப்படுகிறது. மேற்கூறியவற்றாலும் உமாபதி சிவாசாரியாரின் கூற்றாலும், மெய்கண்டதேவர் உத்தேசம் கி. பி. 1232லிருந்தார் என்பதாகக் கொள்ளலாம்."

# பொருள் அடக்கம்

உ

சிவமயம்

# மெய்கண்டாரும் சிவஞான போதமும்

## மெய்கண்டார் வரலாறு

### தோற்றுவாய்

எல்லாம் வல்ல இறைவன் தவத்திற் சிறந்த பெரியார் வாயிலாக அருள் நூலுண்மைகளை மன்னுயிர்களுக்குப் போதித்தருளுகின்றான் என்பது பல சமயத்தாரும் ஒப்புக்கொண்ட கொள்கையாகும். மிகவும் பழமையாகிய தென் தமிழ் நாட்டிலே,

"ஓரால் நீழல் ஒண்கழ லிரண்டும்
முப்பொழு தேத்திய நால்வர்க்கு
ஒளி நெறி காட்டினை"

என்ற திருஞான சம்பந்தப் பெருமான் திருவாக்கின்படி சிவபிரான் முதன் முதல் நான்கு முனிவர்க்கு ஓராலமர நிழலின் கீழ் ஞான நெறியினைக் காட்டியருளினன். "அறம், பொருள், இன்பம், வீடு மொழிந்தவாயான்" என்றபடி அவர்களுக்கு நாற்பொருளையும் பற்றிய பொது நெறி யறிவுறுத்தப்பட்டதென்று தெரிகிறது. இதனையே 'வேத நெறி' என்பர். இந்நெறிக்குச் சிறந்த இலக்கியமாய்த் தற்காலத்தே இலங்குவது திருவள்ளுவர் நூலேயாகும்.

சிவபெருமான் வீட்டின்பத்தையே விழைந்து, அதற் குரிய மந்திரநெறியை அறிய விரும்பிய ஐந்து பெரியோர்க்குப் 'பெருமணி மலை' என்னும் மகேந்திர மலையில் அந்நெறி ஓதும் அருள் நூலை அறிவுறுத்தினனென்பது,

"மன்னு மாமலை மகேந்திர மதனிற்
சொன்ன வாகமந் தோற்றுவித் தருளியும்"

என்ற திருவாசகத்தால் நன்கு விளங்கும். அப்பெரியோர் மரபில் வந்தோரே ஆதி சைவ மரபினர் ஆவர்.

பிறிதொரு காலத்தே திருக்கயிலாய மலையிலே பரம சிவன் திருநந்தி தேவர்க்கு அறிவு நெறியினை அருளிச் செய் தனர். அவர் வாயிலாக எண்மருக்கு வெவ்வேறு காலத்தில் ஞானநெறியை அறிவுறுத்தியதாகத் தெரிகின்றது.

"நந்தி யருள்பெற்ற நாதரை நாடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே"

என்ற திருமூலர் திருவாக்கான் அது உணரப்படும். இவ்வெண் மர் பரம்பரை ஞானாமிர்த நூலுரையில் விவரமாகக் கூறப் பட்டமை காண்க. நந்திகள் நால்வரில் சனற்குமாரர் ஒரு வர்; இவர் வழியில் விஞ்ஞான தேவர் சந்தானம், மெய் கண்டதேவர் சந்தானம் என இரண்டு பரம்பரைகள் தோன்றி விளங்கின. மெய்கண்ட தேவர் பரம்பரையே நமது ஆராய்ச் சிக்குரியதாகும்.

மாணிக்கவாசகப் பெருமான் காலத்தே புத்த சமயத் தால் வந்த இடர் ஒழிந்தது. பின்னர், திருமூலர் திருமந்திரம் வாயிலாகச் சைவ சித்தாந்த ஞானம் தமிழ்நாட்டிலே வளர்ந்து வந்தது. தேவார முதல்வர்கள் காலத்தே சமண சமயத்தால் வந்த இன்னல்கள் நீங்கின. ஆழ்வார் காலத்திற்குப் பின் திரு

விசைப்பாப் பாடிய அருட்புலவர்களால் சைவ வொளி பர விற்று. ஒன்பதாவது நூற்றாண்டிற்குப் பின்னே, வேத வியாச ரியற்றிய பிரம சூத்திரத்திற்குச் செய்யப்பட்ட நால்வகைப் பேருரைகளாகிய நீலகண்ட பாடியம், சங்கர பாடியம், இராமா நுஜபாடியம், மாத்துவ பாடியம் என்னும் மாறுபட்ட விரி நூல்கள் தமிழ்நாட்டிலே பரவிச் சமயக் கொள்கைகளைப்பற் றிப் பெருங் குழப்பத்தை நிரப்பினமையால் சைவ நன்மக்கள் திருமுறைகள் முதலிய சித்தாந்த நூல்களின் உண்மைப் பொருள் உணராது அலமந்தனர். ஆதி மறைக் கருத்துக் களைச் சிறுபான்மை யுள்ளடக்கிய வடமொழி உபநிடதங் களுட் போந்த 'அத்துவித'மென்னும் சொல்லிற்குப் பொருள் இன்னதென்று தெரியாமல் அறிவு நூல் கற்போர் பலரும் மயங்கித் தியங்கினர். அம்மயக்கந் தீர்த்தற் பொருட்டும், திருமுறைப் பெருமையை உலகில் நாட்டற் பொருட்டும் சிவ பெருமானது திருவருளினால் மெய்கண்டசந்தானம் இத்தமிழ் நாட்டில் ஏற்பட்டதாகத் தெரிகின்றோம்.

"நல்வியாத முனியுரைசெய் சூத்திரத்தின்
பாடியமோர் நான்குங் கொண்ட
சொல்வாய்மை பொருள்வாய்மை தெளிதலுற்ற
தோராது சோக முற்றோர்
எல்லாரு மத்துவித சுத்தநிலை
யினிதெய்திச் சோக மேயப்
பொல்லாத சமயிகளு மதிசயிப்பப்
புவனிமிசைப் போத மேற"

என்று மெய்கண்டார் பிறப்பிற்குக் காரணங் கூறும் சந்தா னசாரிய புராண சங்கிரகத் திருப்பாட்டால் அது இனிது விளங்கும். மெய்கண்ட தேவநாயனாரால், சித்தாந்த ஞான பரம்பரை, இந்நிலவுலகிலே பிறசந்தானங்கள் மறை வெய் தியபின் நிலை நாட்டப்பெற்றது. அப்பரம்பரையி னுள்ளார்

மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்தவர்களென்று அழைக்கப்படுகிறார்கள்.

மெய்கண்ட சிவாசாரியார் புராணம் பதினெண்புராணத்துள் பவிடிய புராணத்துட் கூறப்பட்டதாகச் 'சந்தானசாரியார் புராண சங்கிரகம்' என்னும் நூலியற்றிய சுவாமிநாத தேசிகர் தெரித்துள்ளார்.

"பம்பிட நவில்புராணம் பதினெட்டுள் பவிடியத்தில்
எம்பெருமக்கள்காதை யினையன நிகழுமன்றே"

பவிடியத்துள் அவர் வரலாறு கேட்கப்படுவதற்கு இடமில்லை. மெய்கண்ட தேவர் காலம் ஏறக்குறைய 800-ஆண்டுகட்கு முன்னரென்று ஊகிக்க இடமுண்டு. ஸ்ரீ உமாபதி சிவாசாரியார் தமது சங்கற்பநிராகரணத்துள் அந்நூல் இயற்றப்பட்ட காலம் "எழுந்த இருநூறெடுத்த வாயிரம், வாழுநற்சகனம் மருவா நிற்ப" என்றவிடத்துச் சாலிவாகன சகாப்தம் 1235-வது ஆண்டெனக் குறித்துள்ளாராகலின், அவர் காலத்திற்குச் சுமார் இரண்டல்லது மூன்று தலைமுறைக்கு முன் ஸ்ரீ மெய்கண்ட தேவர் ஞானவொளி பரப்பத் தொடங்கினர் என்பது தெளிவாம். ஆயின் அவர் காலத்திற்குப்பின் பவிடிய புராணத்துள் அவர் வரலாறு கேட்கப்படக்கூடியது. அவர் காலத்திற்கு முன்னேயே பவிடியம் அவரது வரலாற்றோடு தோன்றியிருக்குமென்று கோடல் சரித்திரவாராய்ச்சிக்குப் பொருத்தமானதல்ல. எதிர்காலத்துச் செய்திகளை முற்கூறல் சோதிட நூலுக்கே பெரிதும் பொருத்தமாம். பவிடிய புராணம் சோதிட நூலுமல்ல. பாரத முதலிய சில நூல்களுள் கால வியல்பு முதலியவற்றைக் கூறியிருத்தல் காலத்தின் பொதுவியல்பு கூறியதாகுமேயன்றி வருங்கால மக்கள் சரித்திரங்களை விதந்தோதியதாகாது. தமிழ்ப் பெரியோரது சாத்திரங்கட்கு வடநூல் மூலம் வேண்டுமென்ற தப்புக்

கொள்கை சில நூற்றாண்டுகளாக நம்மவர் மனதிற் புகுந்து நிற்பதே இங்ஙனம் மெய்கண்ட தேவர் முதலிய சந்தான குரவர் சரித்திரத்திற்கு வடநூல் மேற்கோள் கூறியதற்குக் காரணமாகும். இவ்வாறே உண்மையில் வடநூல் மேற்கோளில்லாத தலமான்மியங்களுக்கு வடநூல் மேற்கோள் கூறும் பொய்நெறியும் நமது நாட்டில் நிலவுவதாயிற்று.

வரலாறு

தொண்டை நாட்டிற்குஞ் சோழநாட்டிற்கும் நடுவேயுள்ளதாய்த் திருநாவுக்கரசு நாயனாருஞ் சுந்தரமூர்த்தி நாயனாருந் தோன்றி யிலங்கிய, திருமுனைப்பாடியென்னும் நடுநாட்டிலே **திருப்பெண்ணாகடம்** என்னுமூரிலே சைவவேளாள குலத்திலே **அச்சுத களப்பாளர்** என்னும் குலதிலகருக்குத் தவப்புதல்வராக **ஸ்ரீ மெய்கண்ட தேவர்** தோன்றியருளினர். பண்டைத் தமிழரது செந்நெறிக் கொள்கையாகிய சித்தாந்த ஞானத்தை உலகில் நிலைநாட்டுவான் வந்த அருட்பேராசிரியர், பண்டைத்தமிழ் மக்களது சிறந்த நாகரிகத்தைப் பழுதுபடாவண்ணம் போற்றிவரும் சைவ வேளாளர் மரபிலே உதித்தல் மிகவும் பொருத்தமுடையதே. அவர் தவங்கிடந்து பெற்ற தனிப்புதல்வரென்பது யாங்ஙனமெனிற் கூறுதும் :

நாயனாரது தந்தை அச்சுத களப்பாளர்க்குப் பன்னாளாகப் பிள்ளைப் பேறில்லாக் குறை யேற்பட்டிருந்ததால் தமது குலகுருவாகிய திருத்துறையூர் **அருணந்தி சிவாசாரியா**ரிடம் சென்று அக்குறை நீங்குதற் பொருட்டுச் செய்வது யாதெனஅவர் வினாவினார். அப்போது ஆசிரியர் திருமுறையைப் பூசித்துக் கயிறு சாத்திப் பார்த்தனர்.

“பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினே டுள்ளநினை
வாயினவே வரம்பெறுவ ரையுறவேண் டாவொன்றும்

வேயனதோ ளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையா ரவர்தம்மைத் தோயாவாந் தீவினையே”

என்னுந் திருப்பாட்டு அகப்பட்டது. அச்செய்யுளுள் திருவெண்காட்டிலுள்ள முக்குளநீரில் நீராடுபவர்க்குப் பிள்ளையினோடு எண்ணிய யாவும் கைவருமென்று அறுதியிட்டுக் கூறியிருத்தலின், ஆசிரியர், அச்சுத களப்பாளரைத் திருவெண்காட்டிற்குச் சென்று முக்குளநீரில் முழுகி அங்கெழுந்தருளியிருக்கும் பெருமானையும் அம்மையையும்வழிபட்டு வரும்படி கட்டளையிட்டார். அக்கட்டளையைச் சென்னி மேற்கொண்டு அச்சுத களப்பாளர் தமது மனைவியாரோடும் திருவெண்காட்டிற்குச் சென்று ஆசிரியர் விதித்தபடி யொழுகி அறங்கள் பலவுஞ் செய்துவந்தனர். அங்ஙனம் ஓராண்டு அவர் வதியுங்காலத்து ஒருநாள் அவருக்குக் கனவில் சிவபெருமான் தோன்றி ‘அன்ப, இப்பிறவியில் மகப்பேறெய்தும் பான்மை நினக்கு இல்லை’ என்றுரைத்தனர். அதுகேட்ட அச்சுத களப்பாளர் ‘ஞானசம்பந்தப் பெருமானது திருவருட்பாடலை நம்பி ஈண்டுத் தவங் கிடந்ததின் பெரும்பயனாக இம்மையிலேயே நற்புதல்வனை நீவிர் அடியேற் கருளுதல் வேண்டும்’ என்று விண்ணப்பஞ்செய்து பன்முறை பணிந்தனர். அப்போது அம்மையப்பராகிய சிவபெருமான் கருணைகூர்ந்து ‘ஞானசம்பந்தன் நம்மைத் துதித்த பாட்டின்கண் உறுதி வைத்து எம்மை வழிபட்டமையால் அன்னவன் போன்ற மகனை நீவிரும் பெற்று வாழ்திர்’ என்று திருவாய் மலர்ந்தருளினர். அதனைக்கேட்ட அச்சுத களப்பாளர் அளவில்லாத மகிழ்ச்சி யடைந்து கனவெய்தியபின் முன்போலவே சிவபெருமானை வழிபட்டு அறநெறியில் ஒழுகுவாராயினர்.

கனவிற் கண்டதெல்லாம் பொய்யென்று ஒதுக்கிவிடுதல் தவறு. கனவென்பது தன்னுடம்பின் நுகர்ச்சியாகவுள்ளது. நமது கண்ணிற்குப் புலனாகி நின்ற வுடம்பே தூல

வுடம்பென்று கூறப்படும். அவ்வுடம்புகொண்டு நனவிலே உயிர் போதல் வருதல் முதலியன செய்யும். தூங்கும்போது கட்புலனாகாத நுண்ணுடம்பு பலவித நுகர்ச்சிகளை யடைதல் கூடும். அருந்தவத்தினரது கட்புலனுக்கு அருள் செய்யுங் கடவுள் அவரது நுண்ணுடம்பிற்கு மாத்திரையே புலனாகும் வண்ணம் தோன்றுதலு மியல்பே. தமது நுண்ணுடம்பைப் பருவுடம்பினின்றும் வேறு பிரிக்கு மாற்றலுடைய யோகிகள்கூட ஏனையோரது நுண்ணுடம்பிற்குப் புலனாகும் வன்மை யுடையாரென்பது இவ்வாராய்ச்சியில் (Psychic Research) வல்ல மேலைநாட்டுப் பண்டிதர் சிலரும் ஒப்புக்கொள்ளக் கூடியதே. நனவிற் கண்டது கனவில் உருவெளித் தோற்றம்போல் புலனாவது இதனின் வேறாகும். கடவுளும் யோகிகளும் கனவில் தோன்றும் முறை வேறு. பின்னது பிற் பயன் விளைப்பது; முன்னது கைகண்ட பயனன்றும் விளைப்பதில்லை. கனவில் தோன்றிய பெருமக்கள் தாம் அங்ஙனந் தோன்றியதை நனவில் உரைத்தல் கூடுமாதலின் அன்னவர் தோற்றத்தைக் கனவின் பொய்த் தோற்றத்தோடு பிறழக் கொள்ளுதல் தவறாகும். இதன் நுட்பங்கள் இவண் விரிக்கிற் பெருகும். இது நிற்க, வரலாற்றின் தொடர்ச்சியை நோக்குவோமாக.

பின்னர், அச்சுத களப்பாளரது மனைவியார் வயிறு வாய்த்ததறிந்து பத்துத் திங்களிலும் செயற் பாலனவாகிய சடங்குகளனைத்தையும் அவர் உவகையோடு செய்து முடித்தனர். சைவ சித்தாந்த இளஞ் செஞ்ஞாயிறாகிய **மெய்கண்டதேவர்** நல்வேளையிலே நிலவுலக முய்ய உதித்தருளினர்.

பண்டைமறை வண்டாற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டவிரு தயகமல முகைக ளெல்லாங்
கண்திறப்பக் காசினிமேல் வந்தவருட் கதிரோன்

விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாத மெய்ப்போதம் போற்றல் செய்வாம்.

(சிவஞான சித்தியார் - பாயிரம்)

அக்காலத்துச் செய்யவேண்டிய சடங்குகளையும் முடித்துத் திருவெண்காட்டப்பரிடம் விடைபெற்று, சுற்றத்தார் புடைசூழப் பிள்ளையோடும் மனைவியோடும் அச்சுதகளப்பாளர் திருப்பெண்ணாகடஞ் சென்று தமது மாளிகையில் வதிந்தனர். அவ்வூராரெல்லாம் பிள்ளைப் பேறெய்திய நற்செய்தி கேட்டுக் களிப்படைந்தனர்; அவ்வருட் குழந்தைக்கு முதலில் சுவேதவனப் பெருமாளென்ற திருவெண்காட்டடிகள் திருப்பெயரிடப் பெற்றது. சிலநாட் சென்றபின் திருவெண்ணெய் நல்லூரிலுள்ள நன்மாமனார் குழந்தையை எடுத்துத் தமதில்லத்திற்கு கொண்டுபோய் வளர்த்து வந்தனர். அங்ஙனம் வளர்ந்துவரு நாளிலே சுவேதவனப் பெருமாள் முற்பிறவியிலேயே சரியை கிரியை யோகம் முதலியன முடித்துச் சிவஞானமடைதற்குரிய பெருந்தவத்தினராதலின் இரண்டு வயதளவிலே 'அடிசேர் ஞானம்' அடைதற்குரிய சாமுசித்த நிலை எய்தினர். முற்பிறவியில் உறுதியாகப் பயின்ற கல்வி இப்பிறவியில் இளமையில் எளிதாகத் தழைத்தோங்கி ஒளிர்வதை இயற்கையிலேயே கணித நூல் வன்மை பெரிதும் படைத்திலங்கும் சில பிள்ளைகளிடம் கண்கூடாக இன்றுங் காண்கின்றோம். இலக்கியங்களை மூன்று அல்லது நான்கு வயதில் படித்துப் பொருள் கூறும் குழந்தை ஒன்று சமீபகாலத்தில் பர்மாவில் தோன்றியதாகக் கேள்விப்படுகிறோம்.

"ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்(கு)
எழுமையு மேமாப் புடைத்து"

என்றார் திருவள்ளுவர். ஒரு பிறவியிற் கற்ற கல்வியின் பயனாகிய நல்லறிவு பல பிறவிகளிலும் உயிரோடு கலந்து

வளர்ந்து நிலைபெறுதல்போலப் பல பிறவியிற் கற்ற பெரும் பயன் ஒரு பிறவியிலே இளம்பருவத்திலேயே அளவிலடங் காது பொங்கி மிளிர்தல்கூடும். அத்தகைய கல்விபோலப் பல பிறவிகளிற் கடவுள் மாட்டு அன்பு செலுத்தி இயற்றப்படும் அருந்தவமானது ஒரு பிறவியிலே அத்தவத்தின் எல்லை யற்ற பயனாகிய கடவுளது அருட்காட்சியை யளிக்க வல்லது. சைவசித்தாந்த சமயத்திற்கு முதற்றலைவராகிய **ஞானசம்பந் தப் பெருமானும்** சித்தாந்த ஞான பரம்பரைக்கு முதற்றலைவ ராகிய **மெய்கண்ட தேவநாயனாரும்** உலகமுய்யவே தோன்றி யருளினார் என்பது அவர்கள் குழவிப் பருவத்திலேயே உலக நெறி செல்லாது கடவுளது அருண் ஞானநெறியிலேயே நிற் கும் உயர் நிலை எய்தினமையால் விளங்கும்.

சுவேதவனப் பெருமான் திருவெண்ணெய் நல்லூரி லிருந்த காலையில் திருக்கைலாயத்திலிருந்து சனற்குமார முனிவரது ஞானப்புதல்வராகிய சத்திய ஞான தரிசனி களிடம் உபதேசம் பெற்ற பரஞ்சோதி மாமுனிவர் என் பார் ஆகமத்தலைவராகிய ஐம்முனிவருள் தலைசிறந்த அகத் திய முனிவர் வீற்றிருக்கின்ற பொதியமலை நோக்கிச் செல் லுங் காலத்தில் அவரது ஒளி விமானமானது திருவெண் ணெய் நல்லூருக்கு நேராக வந்தவுடன் நின்று விட்டது. அதன் குறிப்பை யுணர்ந்த **பரஞ்சோதியார்** சுவேதவனப் பெருமானைக் கண்டு அவருக்கு மெய்யுணர்வளித்து **மெய் கண்டார்** என்ற தமது ஞானத் தந்தையின் திருநாமத் தைச் சூட்டி யருளினர்.

சிவபெருமான் தக்க பக்குவமுடையார்க்குக் குருவாய் வந்துணர்த்துவது பெரும்பான்மையும் தமது பேரன்பரை நிலைக்களமாகக் கொண்டேயாம். பரஞ்சோதிமா முனிவர் மெய்கண்ட தேவர்க்கு மெய்யுணர் வளித்தகாலை, அவர் கடவு ளோடு இரண்டறக் கலந்து நிற்கும் நிலையினின்று அருள்

செய்தாராகலின் சிவபெருமானே நமது நாயனாருக்கு உண்மைப் பொருள் உணர்த்தியதாகக் கொள்ளவேண்டுமேயொழிய, பரஞ்சோதி முனிவர் தாமே அவ்வாறு உணர்த்தினர் என்று கோடல் பொருந்துவதன்றாம். இவ்வாறே உபமன்னியர் கண்ணனுக்கு உபதேசஞ் செய்ததாகவும் கண்ணன் பார்த்தற் கறிவுறுத்தியதாகவுங் கூறுப.

மெய்கண்டார் கலைஞானமனைத்தையும் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையாரிடங் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தனர். பின் அவர் தாம் பெற்ற இன்பம் இவ்வையகம் பெறவேண்டுமென்ற திருவுள்ளக் கருத்தால் சிவஞான போதமென்னும் சைவசித்தாந்தத் தலைமணி ஞானநூலினை இயற்றியருளினர். அச்சிவஞானபோத நுண்பொருளை அவர்பாற் கேட்டுத் தெளிந்தோர் நாற்பத்தொன்பது மாணவராவர். அந்நாற்பத்தொன்பதின்மரது பரம்பரை வாயிலாகவே இத்தமிழ்நாடெங்கும் சித்தாந்த அறிவுச்சுடர் கொளுத்தும் ஒளி நிலயங்களாகிய திருமடங்கள் ஏற்பட்டன. முதல் மாணவர் பரம்பரையில் வந்த ஸ்ரீ நமசிவாய தேசிகரால் நிலைபெறுத்திய மடம் திருவாவடுதுறையாதீனமாகும். அதே பரம்பரையில் வந்த ஞான சம்பந்த தேசிகரால் தருமபுராதீனம் ஏற்படுத்தப்பட்டது. மெய்கண்ட தேவருடைய மாணவருள் முதல் நின்றவர் அவரது தந்தையார்க்குக் குலகுருவாகிய அருணந்தி சிவாசாரியாராவர். பதினான்கு சித்தாந்த நூல்களுள் ஒன்றாகிய உண்மை விளக்கவாசிரியராகிய மனவாசகங் கடந்தவரும் அவர்களுள் ஒருவர். சிற்றம்பல நாடிகளும் அவருள் ஒருவரென்ப. மெய்கண்ட தேவநாயனார் தமது மாணவருக்கு உண்மைப் பொருளுணர்த்திய பின்னர், நனவிலேயே அதீதத்தைப் புரிபவராய் இடையறாது சமாதி நிலையிலிருந்து ஐப்பசித் திங்களில் சோதிநாளில், சிவபெருமானோடு இரண்டறக் கலந்தனர்.

## சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே

ஸ்ரீமெய்கண்ட தேவநாயனுர் அருளிச்செய்த சிவஞான போதத்தை வடமொழியிலுள்ள இரௌரவாகமத்திலே பாவ விமோசனப் படலத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களின் மொழிபெயர்ப்பென்று இக்காலத்திலே பலர் கருதுகின்றார் கள். இதைப்பற்றிய தடைவிடைகளின் விரிவு, சந்தாணசாரி யார் சரித்திரத்துங் காண்க. இங்கே அக்கொள்கை தவ றுடைத்தென்பதற்குரிய காரணங்களை ஒருவாறு தொகுத் துரைப்பாம்.

தமிழிலே மொழி பெயர்ப்பு நூல் செய்யப் புகுந்தார் யாவருந் தமது மேற்கோளை விளக்குவது மரபு. அது திரு **விளையாடற் புராண** முதலிய பல நூல்களிலுங் காணப்படும். ஒரு நூலின் ஆசிரியராதல், பாயிர முரைத்தோராதல், நூலாசிரியர் காலத்தே நூலினைப்பற்றி எழுதினோராதல் அது மொழி பெயர்ப்பென்று கூருதவிடத்து அந்நூல் மொழி பெயர்ப்பல்ல வென்பது நன்கு ஊகிக்கப்படும். பிற மொழியினின்று தமது மொழியிற் பெயர்த்ததை மறைத்துக் கூறும் வழக்கம் தமிழ்ப் பேராசிரியர்கள்பால் யாண்டுங் காணப்படுவதில்லை. வடமொழி நூலோர்க்கு அங்ஙனஞ் செய்தல் இயல்பென்பது **பெரிய புராணச்** சரித்திரத்தால் இனிது விளங்கும். ஆசிரியர் **சேக்கிழார்** தமது நூலிற்கு முதனூல் **திருத்தொண்டத்தொகை**யும் **நம்பியாண்டார் நம்பி திருவந்தாதி**யுமென்று கூறியிருப்பவும், அதனை வடமொழி யில் மொழிபெயர்த்தோர் தமது மூலத்தைக் கூருமையாலும் தங்களுடைய மொழி பெயர்ப்பு நூலே தமிழ்நூற்கு மூல மென்று அபிமானம் பற்றி வாய்ப்பறை யறைந்தமையாலும் அதனைக் கேட்டு மயங்கிய தமிழர் சிலர் **பெரிய புராணத்**

னையே மொழிபெயர்ப்பு நூலென்று கூசாது சொல்லத் தொடங்குகிறார்கள். இது நிற்க.

சிவஞான போத மியற்றிய ஆசிரியர் மெய்கண்டார் தமது நூலிற்கு மூலம் இரௌரவாகமம் பாவ விமோசனப் படலமென்று கூறவில்லை. முதற் சூத்திரத்தே "என்மனார் புலவர்" என்று கூறினாரே யன்றி, "என்றார் சிவபெருமான்". "என்றது இரௌரவம்" என்று விதந்தோதினாரில்லை. மங்கல வாழ்த்தும் அவையடக்கமுங் கூறிய ஆசிரியர் தமது நூற்கு மூலமிருந்திருப்பின் அதனைக் கூறாதுவிடக் காரணமில்லை. கூறவேண்டியது அவசியமில்லை யென்று சொல்லுவதும் பொருத்தமாகாது. என்னை? சிவபெருமானது திருவாக்கின் மொழிபெயர்ப் பென்றுதல் இரௌரவ சிவாகமத்தின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப் பென்றுதல் ஆசிரியர் காட்டியிருந்தால் அது கற்போருக்கு மிக்க ஊக்கத்தைக் கொடுக்க வல்லதாகும். ஆன்றோர் வழக்கின்படி நூன் மாபும் உரைத்தவாறாகும். ஆசிரியர் நூற்கு மூலம் கூறாமையாலே மூலமில்லை யென்றலே பொருத்த முடைத்து.

இன்னும் தமிழ்ச் சிவஞான போத முதற் சூத்திரத்தையும் வடமொழிச் சிவஞான போத முதற் சூத்திரத்தையும் ஒத்துப் பார்ப்பின் தமிழ்ச் சூத்திரத்தின் பொருளைச் செவ்விதிற் றெரிக்கும் ஆற்றல் வடமொழிச் சூத்திரத்திற் கில்லையென்பது புலனாகும். தமிழ்ச் சூத்திரத்தில் 'அவனவளது' என்று கூறியிருப்ப, வடமொழிச் சூத்திரம் "பெண்ணாணலியின் ஆதித் தன்மையால்" என்று தொடங்குகின்றது. 'அவனவளது வெனும் அவை'யென்று பிரபஞ்சத்தை முக்கூற்றினுளடக்கிக் கூறியிருக்குஞ் சிறப்பு வடமொழிச் சூத்திரப் பகுதிக்கில்லை. பின்னையது முன்னையதற்கு மூலமாமெனின் ஆசிரியர் மெய்கண்டார் சிவபெருமானது வாக்கென்று சொல்லப்படும் வடநூற் சூத்திரத்திற் கியைய

தமிழ்ச் சூத்திரஞ் செய்திருப்பார். அவ்வாறு செய்யாமை யால் வடமொழிச் சூத்திரத்தின் வழி வந்தது தமிழ்ச் சூத் திர மல்லவென்று ஊகிக்கப்படும். தமிழ்ச் சூத்திரத்திலுள்ள 'மலத்துளதாம்' என்கின்ற சொற்றொடருக்கு நேரான சொற்றொடர் வடநூற் சூத்திரத்தில் காணப்படவில்லை. உல கம் ஒடுங்கு மென்பதற்கும் உயிர்களுக்கு ஆணவ மலபரி பாகத்தின் பொருட்டு மீளவும் அது தோன்று மென்பதற் கும் 'மலத்துளதாம்' என்ற ஒரு சொற்றொடர் அமைத்த திறமை ஆசிரியர் **மெய்கண்டார்க்கே** யுரியது. இவ்வகையான நயம் அமையாத வடமொழிச் சூத்திரத்தை மூலமென்றும் சிவவாக்கென்றுங் கூறுதலும் தமிழ்ச் சூத்திரத்திற்கேற்ப வடமொழிச் சூத்திரத்தை வலிந்து பொருள் கோடலும் சரித்திர வாராய்ச்சி யின்மையான் வந்த அபிமானத்தின் பயனேயன்றி வேறில்லை. இவ்வாறே ஏனைத் தமிழ்ச் சூத் திரங்களையும் வடமொழிச் சூத்திரங்களோடு ஒப்பிட்டு நடுவு நிலைமையோடு ஆயுமிடத்துத் தமிழ்ச்சூத்திரமே வடமொழிச் சூத்திரத்திற்கு மூலமென்பது தெளிவாகும். சுருக்கமாக அதனை ஈண்டுக் காட்டுதும் :—

வடமொழிச் சிவஞான போத முதற் சுலோகத்தே 'மூவினைமையின்' என்ற பொருளுள்ள சொற்றொடரில்லை. அதற்குப் பதிலாகக் 'காரியம்' என்னும் சொல்லே அமைந்து கிடக்கின்றது. அது அத்துணைச் சிறப்புடையதல்ல வென் பது நன்கு விளங்கும். இனி 'அந்தம் ஆதி' என்ற சொற் றொடர்போல நயமான வாக்கியம் வடமொழிச் சுலோகத்தி லில்லை. 'கர்த்தா ஒருவன் உளன். அவன் பிரபஞ்சத்தை ஒடுக்கி உளதாக்குவன்' என்பது மாத்திரமே கூறப்பட்டது. 'என்மனார் புலவர்' என்பதற்கும் நேரான பதமில்லை.

இரண்டாஞ் சுலோகமானது ஆசிரியர் **ஸ்ரீ மெய்கண்டா** ரது சூத்திரத்திற்கு வியாக்கியானம்போலத் தோன்றுகிறது.

எட்டாஞ் சூத்திரத்தில் 'தம்முதல்' என்பதன் பொருளை இனிதுணர்த்துஞ் சொல் வடமொழிச் சுலோகத்தி லில்லை. அதனால் சிவபெருமான் குருவாய் வருகின்றார் என்ற வுண்மையை அச்சுலோகம் விளக்கவில்லை. அரன் என்பதற்கும் நேராகிய பதமில்லை. 'வளர்ந்து' என்பது போலச் 'சகஸ்தித்வா' என்ற சொல் நயமுடையதல்ல.

ஒன்பதாஞ் சூத்திரத்தே 'ஊனக்கண் பாசமுணரா' என்பதன் பொருளை விளக்கும் பகுதி வடமொழிச் சுலோகத்திலில்லை. 'பாசம்' என்ற சொல்லிற்கு 'விருத்தி' யென்ற சொல்லே சுலோகத்திற் காணப்படுகின்றது. 'விதி' என்னும் பதப் பொருளை விளக்குஞ் சொல் அதில் காணப்படவில்லை.

பத்தாவது சூத்திரம் பாசக்ஷயம் கூறவந்தது. அதனை இனிது விளக்கும் 'மலமாயை தன்னொடு வல்வினை யின்றே' என்பதன் கருத்தை விளக்குதலோடமையாது 'ஸ்வாநுபூதிமான்பவதி' என்ற வாக்கியத்தைச் சேர்த்து வருஞ் சூத்திரத்தின் கருத்தையும் வடமொழிச் சுலோகம் விளக்குவதாயிற்று. 'வல்வினை' என்ற சொற்றொடருக்கு நேராகிய பகுதியில்லை. கூறவேண்டியதைக் கூறாது அவசியமில்லாத வாக்கியத்தைச் சேர்த்து நிற்கின்றது அச்சுலோகம். 'இறை பணி நிற்க' என்ற அழகிய சொற்றொடர் போல 'ததீனஸ்வவிருத்திகம்' என்ற வாக்கியம் ஆற்றலுடையதல்ல.

பதினொன்றாஞ் சூத்திரத்தே 'கண்டு காட்டலின்' என்ற சொற்றொடரின் உண்மைப் பொருளை இனிது விளக்கு மொழி சுலோகத்தில் இல்லை. காட்டுபவன் என்னும் பொருளையே சுலோகம் விளக்கிற்று. காண்பவன் என்பது தெளிவுபடுத்தப் படவில்லை. 'காட்டலின்' என்ற சொல்லாற்றலினாலே ஆசிரியர் மெய்கண்டார் பெறவைத்த நுட்பத்தை 'ஆத்மோபகாரகே தாஸ்மின்' என்று வடமொழிச்

சுலோகம் விரித்தது. 'அயரா' என்பதன் பொருள் நயமுணராது மேலான என்ற பொருளுள்ள சொல்லையே வடமொழிச் சுலோகத்தார் அதனைக் குறிக்க வழங்கியுள்ளார். 'அரன் கழல் செலுமே' என்பதின் பொருளை விளக்கும் பகுதி வடமொழிச் சுலோகத்திலில்லை. மேலான பக்தியைச் செய்யவென்ற வளவில் சுலோகம் நின்றுவிட்டது.

பன்னிரண்டாவது சூத்திரத்திலே "செம்மலர் நோன்றாள் சேரவொட்டா அம்மலங்கழீஇ" என்கின்ற கருத்தை வடமொழிச் சுலோகம் விளக்கவில்லை. அதற்குரிய வாக்கியமும் அதிலில்லை. 'அரனென' என்பதற்கும் நேரானசொல்லில்லை. "மாலற நேய மலிந்தவர்" என்பதற்குந் தெளிவான வாக்கியமில்லை. அஃதன்றியும் வடமொழிச் சிவஞானபோத இறுதிச் சுலோகத்தின் இறுதியடிக்கும் சரியான வாக்கியந் தமிழிலில்லை.

இவ்வேறுபாடுகளால் தமிழ்ச்சூத்திரங்களிலுள்ள நயங்களை வடமொழிச் சுலோகங்களிற் காண இடமில்லையென்பதும் ஆசிரியர் மெய்கண்டாரது நூல் நயத்தைச் செவ்விதின் உணர்ந்து அதனை வடமொழியில் இனிதமைக்கும் ஆற்றலில்லாத ஒரு வடமொழி வாணரால் வடமொழிச் சிவஞானபோதம் எழுதப்பட்டதென்பதும் இனிது விளங்கும். ஆசிரியர் மெய்கண்டாரது சூத்திரங்கள் மிக்க நயமுடையனவென்று கூறினுல் அவையெல்லாம் வடமொழிச் சுலோகங்களில் தொக்கு நின்றனவென்று தமக்குத் தோன்றியவாறு அபிமானிகள் போலிச் சமாதானங் கூறுவர். ஆசிரியர் மெய்கண்டாரது நூலை மொழி பெயர்ப்பு என்று சொல்லுவது திருவாசகத்துக்குப் போப்பையர் என்னும் பெரியோரால் அமைந்துள்ள மொழி பெயர்ப்பைத் தனியே எடுத்து அது மொழிபெயர்ப்பு நூலென்று காட்டாது அச்சிடப்பட்டபின் நூறு அல்லது இருநூறு ஆண்டுகள் சென்ருல் ஆங்கிலப்பற்று மிக்கோர்

போப்பையரது ஆங்கிலத் திருவாசகத்தையே மாணிக்கவாசகர் தமிழில் மொழி பெயர்த்து விட்டாரென்று கூறினாற் போலும். ஓவியச் சீர்மை வாய்ந்த ஒரு வடிவத்தையும் அது வாயப்பெறாத மற்றொரு வடிவத்தையும் ஆசிரியர் மெய்கண்டார் நூலை வழி நூலென்றுரைப்பார்க்குக் காட்டினால், பின்னையதிற் புதைந்து கிடந்ததையே முன்னையது விளக்க எழுந்தது என்று அவர் கூறுவர் போலும். இங்ஙனஞ் சாற்றுவார் மயக்கத்திற்கு மருந்தில்லை. உண்மையை நுண்ணிதின் ஆயப் புகுவோருக்கு இதுகாறுங் கூறிய காரணங்களால் ஆசிரியர் மெய்கண்டார் நூலே முதனூலென்பது அங்கை நெல்லியாம்.

மெய்கண்டார் இயற்றிய சிவஞான போதத்தை வடமொழியிற் பெயர்த்தவர் அதனை வடநூற் பன்னிரண்டாவது சுலோகத்திற் குறிப்பித்துள்ளார். வடமொழிச் சிவஞான போதத்தின் பன்னிரண்டாவது சுலோகத்தின் இறுதியில் "ஏவம் வித்யாத் சிவஞானபோதே சைவார்த்த நிர்ணயம்" என்ற வாக்கியங் காணப்படுகின்றது. அதற்குப் பொருள் 'இவ்விதமாகச் சிவஞான போதத்திலே சைவப் பொருள் துணியப்பட்டதென்றறிக' என்பதே; இந்த வாக்கியத்தில் 'சிவஞான போதே' என்ற சொல் உற்று நோக்கத்தக்கது. அந்தச் சொல் வடமொழிச் சிவஞான போதத்தைச் சுட்டுவதல்ல. அதற்குரிய சுட்டு அச்சூத்திரத்திலில்லை. இல்லாததை இருப்பதென்று கோடல் பொருத்தமில்லை. ஆதலால் அங்குச் சிவஞான போதமென்றது மெய்கண்டாரது நூலையே குறிக்கும். வடமொழிச் சிவஞானபோதம் எழுதப்பட்ட காலத்தே சிவஞானபோதம் என்று பெயருள்ள நூல் ஒன்றுதானிருந்ததாகலின் அதனைத் தமிழ்ச் சிவஞான போதமென்று கூறுவதற்குக் காரணமில்லை. தமிழிலுள்ள திருவாசகத்தை ஆங்கிலத்திலே மொழி

பெயர்த்த போப்பையர் அதனைத் தமிழ்த் திருவாசகமென்னும் தமது மொழிபெயர்ப்பை ஆங்கிலத் திருவாசகமென்றுங் கூறினாரில்லை. யாண்டும் அவ்வாறே ஆகும். ஒரு மொழியிலுள்ள ஒரு நூலை மொழி பெயர்ப்பவர் நூலின் பெயரோடு மொழிப் பெயரையும் இணைத்துக் கூறுவது வழக்கமில்லை. அவ்வாறே நூலாசிரியர் பேரையும் நூலினோடு இணைத்துக் கூறுதல் மரபன்மை யறிக. மகாபாரதத்தின் மொழி பெயர்ப்பு என்ற விடத்து வியாசர் செய்த மகாபாரதத்தின் மொழி பெயர்ப்பு என்று கூறுவது அவசியமில்லை. வியாசரைத் தவிர வேறு யாராவது மகாபாரதஞ் செய்திருந்தால் வியாச மகாபாரதமென்று கூறுவதற்குக் காரணமுண்டு. சிவஞான போதமென்பது ஒரே நூலாகவும் அது மெய்கண்டார் ஒருவராலேயே செய்யப்பட்டதாகவும் இருந்தமையாற்றான் வடமொழிச் சிவஞான போதம் எழுதினோர் 'சிவஞான போதே' என்ற அளவில் மெய்கண்டார் நூலையே குறித்தாரென்று கொள்க.

அன்றியும் வடமொழிச் சூத்திரத்தின் மொழிபெயர்ப்பு மெய்கண்டார் நூலின் பன்னிரண்டாவது சூத்திரமென்று கொண்டால் "ஏவம் வித்யாத் சிவஞான போதே சைவார்த்த நிர்ணயம்" என்ற வாக்கியத்திற்கு மொழி பெயர்ப்பு அதன்கண் ஏன் காணப்படவில்லை என்ற வினாவெழும். அதற்கு 'அவ்வாக்கியத்தை மொழி பெயர்த்தல் அவசியமில்லை'யென்ற விடை தக்கதன்றாம். சிவாகம முடிபினை அறுதியிட்டுச் சிவபெருமானாலே கூறப்பட்ட சொற்றொடரை அவசியமில்லையென்று ஒதுக்குவது ஆசிரியர் மெய்கண்டார் மாட்டு ஏற்படுத்தப்படுங் குற்றமாமன்றோ? அங்ஙனம் மெய்கண்டார் மேற் குற்றமேற்றுதல் தவறாகும். ஆதலால் மெய்கண்டார் நூல் செய்யுமுன் வடமொழியில் சிவஞானபோதம் ஏற்படவில்லையென்றே கொள்ளுதல் பொருத்தமுடைத்து.

இன்னும் இரௌரவாகமத்தே, பல சுலோகங்களையுடைய பாவ விமோசனப் படலத்துள் பன்னிரண்டு சுலோகங்கள் மாத்திரமே சிவஞான போதம் என்ற ஒரு சாத்திரமாயிற்று என்று கோடல் அறிவிற்குப் பொருந்துவதன்றும். அதன்கணுள்ள பன்னிரண்டு சூத்திரங்களை வேறாக எடுத்து அவற்றை மாத்திரம் சிவஞானபோதமென்று கூறினாரென்று கொள்ளுவதற்கிடமில்லை. ஏனெனில் அப்பன்னிரண்டு சூத்திரங்களுள் இறுதிச் சூத்திரமே சிவஞான போதமென்ற வார்த்தையை உள்ளடக்கி நிற்கின்றது. அவ்வார்த்தையுள்ள ஒரு சுலோகம் பாவ விமோசனப் படலத்துள் அமைந்து கிடக்குமாயின் பன்னிரண்டு சூத்திரத்திற்கும் சிவஞான போதமென்ற பெயர் வேறாக ஏற்பட்டிருக்க இடமில்லை. ஒரு படலத்தினுள்ளே ஒரு சூத்திரம் அதற்கு முன்னுள்ள பதினொரு சூத்திரங்களையும் ஒரு சாத்திரமாகத் தோற்றுவாயின்றிக் கூறல் நூன்முறைக்கு முற்றுமாறாகும். ஆதலால் வடமொழிச் சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரமும் பாவ விமோசனப் படலத்தின் பகுதியென்று கொள்ள இடமில்லை. இரௌரவத்தின் பகுதியென்று சொல்வதற்குத் தெளிவான சான்றுகள் ஒன்றுமில்லை. இரௌரவத்தின் பகுதியெனப்படுஞ் சில சுலோகங்கள் காலஞ்சென்ற திரு. செந்திநாதய்யரவர்களால் வெளிப்படுத்தப்பெற்றன. அச்சுலோகங்கள் தீக்கை செய்யு முறையைப்பற்றிக் கூறுகின்றன. அங்ஙனங் கூறுமிடத்துச் சீடன் கையில் சிவஞான போதமென்னுஞ் சாத்திரத்தைக்கொடு என்ற பொருளுள்ள வாக்கியங் காணப்படுகின்றது.

“பாவநாதீக்ஷயாசைநம் சுத்தம் க்ருத்வாயதாவிதி
சிவஞானபோத சாஸ்திரஞ்ச தத்யாத்பத்ய சிர்தகம்”

சிவஞான போதமானது இரௌரவத்தின் ஒரு பகுதியாயிருக்குமாயின் தன்னின் வேறாகிய ஒரு சாத்திரமாக

இரௌரவம் அதனைக் கூறவேண்டியதில்லை. ஆகவே சிவ ஞான போதம் இரௌரவத்தின் பகுதி யென்பதற்கும் வெளிப்பட்ட சுலோகங்கள் இடங்கொடுக்கவில்லை. ஆதலால் சிவஞான போதத்தை இரௌரவத்திலிருந்து வந்ததென்று சொல்லுவதற்கு மெய்கண்டார் காலத்திற்குப்பின் புதிதாக ஏற்படுத்திய சில சுலோகங்களே இப்போது இரௌரவ மெனப்படுதல் காண்க.

இனி ஸ்ரீ மெய்கண்டாரது முதல் மாணவராகிய அருணந்தி சுவாமிகள் தமது நூல்வழி கூறுஞ் செய்யுள் கவனிக்கத்தக்கது. "போத மிகுத்தோர் தொகுத்த" என்னும் முதற் குறிப்பினையுடைய பாட்டில் மிக்க ஞானமில்லாமலும் மிக்க பேதமையில்லாமலும் நடுத்தரமான நிலையில் நிற்போர்க்கு உய்திகூட நெறி எது என்று ஆராய்ச்சி செய்வோரின் பொருட்டு ஒரு வழியை இறைவன் நந்தி பெருமானுக்கருளிச்செய்ய அவர் அவ்வழியைச் சனற்குமாரருக்கு உபதேசிக்க அந்த நெறியை மெய்கண்டதேவர் கடைப்பிடித்து அருளிச்செய்த ஞான நூலின் வழித்தாயது சிவஞானசித்தியார் என்று கூறப்பட்டுள்ளது. இதனால் விளங்குவது யாதெனில் சிவஞானபோதத்திற் கூறப்படும் ஞான நெறியானது இறைவனிடத்திலிருந்து நந்திதேவர் பரம்பரை வாயிலாக மெய்கண்டார்க்கு வந்ததென்று தெரிகின்றோம். உபதேச முறையாற் பெற்ற அரும்பொருளை அடிப்படையாகக் கொண்டு ஸ்ரீ மெய்கண்டார் செய்தருளிய ஞான நூலே சிவஞானபோதமென்று கொள்ள வேண்டுமேயன்றி நூல்தானே கயிலாயத்திலிருந்து குவலயத்தில் இழிந்ததென்று கூற இடமில்லை. நெறி எது என்பவர்களுக்கு அதனை யுணர்த்த அவ்வழியைக் குருநாதன் கொண்டு நூல் செய்தாரென்பதே பொருந்துவதாகும். அது உமாபதி சிவாசாரிய சுவாமிகள் சிவப்பிரகாசத்துப் பாயிரத்துள் நான்மரபும் சந்தானமரபும் வேறு வேறாகக் கூறின

மையாலே தெள்ளிதிற் புலனும். சிவப்பிரகாசம் ஐந்தாவது பாட்டினுள் சந்தான பரம்பரை திருக்கயிலாயத்தில் வீற்றிருக்கும் பெருமான் முதலாக மறைஞான சம்பந்தர் ஈறுகக் கூறப்பட்டது.

"தேவர்பிரான் வளர்கயிலைக் காவல் பூண்ட
 திருநந்தி யவர்கணத்தோர் செல்வர் பாரிற்
பாவியசத் தியஞான தரிசனிக ளடிசேர்
 பரஞ்சோதி மாமுனிகள் பதியாம் வெண்ணெய்
மேவியசீர் மெய்கண்ட திறலான் மாறு
 விரவுபக பூருணந்தி விறலார் செல்லத்
தாவிலருண் மறைஞான சம்பந்த ரிவர்இச்
 சந்தானத் தெமையாளுந் தன்மை யோரே."

ஆயின் சிவப்பிரகாசம் பதினொன்றாவது பாட்டினுள் நூன் மரபு கூறப்படுமிடத்து ஸ்ரீ மெய்கண்டார் சிவஞான போதம் செப்பினர் எனவும் அவரது ஞானப்புதல்வராகிய அருணந்தி சிவாசாரியர் சிவஞானசித்தியார் இயற்றினரெனவும் அவ்விரண்டு நூலையும் ஆகம நூலையும் ஆசிரியர் திருவுள்ளத்தில் உறைகின்ற திருவருளையுங் கலந்து சிவப்பிரகாசமியற்றப் படுவதாகக் கூறுவது காண்க.

"தெரித்தகுரு முதல்வருயர் சிவஞான போதஞ்
 செப்பினர்பின் பவர்முதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற் றவர்கள்திரு வடிகள் போற்றி
 விளம்பியநூ லவையிரண்டும் விரும்பி நோக்கிக்
கருத்திலுறை திருவருளு மிறைவ னூலுங்
 கலந்துபொரு வண்மையெனக் கருதி யானு
மருத்திமிக வுரைப்பன்வளர் விருத்த நூறு
 மாசில்சிவப் பிரகாச மாகு மென்றே."

ஸ்ரீ அருணந்தி சிவாசாரியர் இயற்றிய 'போத மிருபதோர்' என்று தொடங்கும் சிவஞானசித்தி நூன்மரபுச் செய்யுளிலாதல், சிவப்பிரகாச நூன்மரபுச் செய்யுளிலாதல், இரெண

ரவ ஆகமத்திலிருந்ததாதல் பிற ஏதாவது ஓராகமத்தி லிருந்தாதல் சிவஞானபோதம் இயற்றப்பட்டதாகக் கூறப்படவேயில்லை. 'தெரித்தகுரு' என்றசெய்யுளில் சிவஞானபோதத்தையும் சிவஞான சித்தியாரையும் வேருகவும் இறைவன் நூலாகிய ஆகமத்தை வேருகவும் கூறியிருத்தல் காண்க. இறைவன் நூலின் ஒரு பகுதியின் மொழிபெயர்ப்பென்று அங்கே ஆசிரியர் கூறிற்றிலர். நூன்மரபு கூறுமுன் சிவாகமத்தினியல்பினை விரிந்த ஒரு செய்யுளில் விளக்கியிருந்தும் அச்சிவாகமத்துள் ஒன்றினுடைய பகுதியின் மொழிபெயர்ப்பென்று சிவஞானபோதத்தைக் குறித்துக் கூறவில்லை. சிவாகமமாவது சரியை கிரியை யோகம் ஞானமாகியவற்றைத் தெளிவுற உணர்த்துவ தென்று நன்கு வகுத்துக் கூறியவாசிரியர் அதற்கடுத்த பாட்டில் சிவஞானபோதத்தை அச்சிவாகமத்தின் வழித்தென்று எளிதாகக் கூறியிருக்கலாம். இரௌரவப் பகுதியின் மொழிபெயர்ப்பாகச் சிவஞானபோதமிருக்குமாயின் ஆசிரியர் அங்ஙனங் கூருது விடார்.

"கிரியையென மருவுமவை யாவு ஞானங்
கிடைத்தற்கு நிமித்தமெனக் கிளக்கு முண்மை
சரியைகிரி யாயோகத் தன்மை யோர்க்குச்
சாலோக சாமீப சாரூ பங்கண்
மருவியிடு முயர்ஞான மிரண்டா மாறு
மலமகல வகலாத மன்னு போதத்
திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ்
சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே."

சந்தான குரவர் நால்வருள் நூல் செய்த மூவருஞ் சிவஞானபோதத்தை இரௌரவாகமப் பகுதியின் மொழிபெயர்ப்பு என்று கூறிற்றில ராகலான் ஸ்ரீ மெய்கண்டார் காலந்தொட்டு உமாபதி சிவாசாரியர் காலம் இறுதியாகச் சிவஞானபோதம் வடநூலின் மொழிபெயர்ப்பு என்ற கொள்கை உல

கத்தில் நிலவவில்லையென்பது திண்ணம். சந்தான குரவர் காலத்திற்குப் பின்னே சிவஞானபோதப் பெருமை தமிழுல கிற் பரவிய காலத்தே வடமொழியிற் சிவஞானபோதம் ஏற் பட்டிருத்தல் வேண்டும். அங்ஙனம் ஏற்பட்ட காலத்திற்குப் பின்னையே அது இரௌரவாகமத்தி லிருந்து வந்ததென்ற கட்டுக்கதை தமிழ்நாலுக்கு வடநூல் மூலம் வேண்டுமென்ற தப்புக் கொள்கையில் உற்பத்தியாயிருத்தல் வேண்டும். அதற்குச் சற்று முன்னேதான் சிவஞான போதத்திற்கு முன்னும் பின்னும் எழுதப்பட்ட பாயிரச் செய்யுட்கள் பாக் கப்பட்டிருத்தல் வேண்டும்.

அங்ஙனமாயினும் அப்பாயிரச் செய்யுட்களில் சிவஞான போதம் இரௌரவ ஆகமத்தின் பகுதியென்று கூறப்படவே யில்லை. நந்திபெருமான் நூல் செய்தால் அது வடமொழி யிற்றா னிருக்கவேண்டு மென்று துணிவதற்குக் காரணம் யாதோ விளங்கவில்லை. அல்லதூஉம் நந்தி பெருமான் உரைத்த நூலே ஆகமத்தின் பகுதியென்று கூறவும் போதிய பிரமாணம் யாதுமில்லை. ஆதலால் இச்சிறப்புப்பாயிரச் செய் யுட்கள் எழுந்த காலத்தும் சிவஞானபோதம் இரௌரவத் தின் வழிநூலென்ற கொள்கை உலகத்தில் நிலைபெறவில்லை. இதனால் யூகிக்கப்படுவது யாதெனில் சிறப்புப்பாயிரச் செய் யுட்கள் எழுந்த காலத்திற்குப் பின்னேயே வடமொழிச் சிவ ஞானபோதத்தை வைப்பதற் கிடமாக இரௌரவாகமப் பகுதியொன்று ஏற்பட்டிருத்தல் வேண்டும். அதற்குப் பின் னேயே வடமொழிச் சிவஞான போதத்திற்கு விரிவுரை வகுத்த சிவாக்கிரயோகிகள் இரௌரவத்திலே சிவஞான போதம் உபதேசிக்கப் படுகின்றதென்ற கருத்தைத் தமது பாடியத்துள் கூறுவாராயினர். சிவாக்கிரயோகிகள் காலந் தொட்டு சிவஞானபோதம் மொழிபெயர்ப்பு என்ற கொள்கை யானது வலிபெறுவதாயிற்று. திருவாவடுதுறையில் விளங்

கிய உலகுடைநாயனு ரென்பாரும் அக்கர்ண பரம்பரைக் கட்டுக் கதையை நம்பினதாக அறிகிறோம். அவர்க்குப் பின் வந்த ஆசிரியர் சிவஞான சுவாமிகள் இதனைப் பற்றிய சரித் திரவாராய்ச்சியிற் கவனஞ் செலுத்தாது ஐதிக வரலாற்றைத் தான்கேட்ட முறையாகவே தமது நூலிற் குறித்துவிட்ட னர். அங்ஙனங் கூறினும் 'சிவஞானபோத நெறி காட்டும் வெண்ணெய் பயில்வாய்மை மெய்கண்டான்' என்றவிடத்துக் கயிலாய பரம்பரையில் வந்தது சிவஞானபோதநெறி யென்று குறிப்பித்தமை காண்க. 'காமிக முதலிய சைவாகமங்களுள் ஞானபாதப் பொருளின் இகலறுத்து அவற்றின் பொரு ளுண்மை போதித்தற்கு இரௌரவாகமத்தில் எழுந்தது சிவ ஞானபோதம்' என்றவரலாறு ஸ்ரீ அருணந்தி சிவாசாரியாராற் கூறப்படவில்லை யென்பது காண்க. அது அருணந்தி சிவா சாரியரது "போதமிகுத் தோர்தொகுத்த" என்ற செய்யுளை உற்று நோக்கில் நன்கு விளங்கும். அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் சுருக்கிக் கூறினதையே ஆசிரியர் சிவஞானயோகி கள் விரித்துக் கூறினரென்று ஒரு சாரார் இரண்டிற்கும் பொருத்தங்கூற முற்படுவாராயின் அருணந்தி சிவாசாரிய சுவாமிகள் கூறியது சுருக்க மென்பதற்கும் ஆசிரியர் சிவ ஞான யோகிகள் கூறியது விரிவு என்பதற்குந் தக்க பிரமா ணங் காட்டவேண்டும். இரௌரவாகமத்திலாவது நந்தி பெருமானுக்கு மலைவு தீர்தற்பொருட்டுச் சிவஞானபோதம் கூறப்பட்டதென்று வரையப்பட்டுள்ளதாவென்று ஆராய்ச்சி செய்தால் அங்ஙனங் கூறும் இரௌரவாகமத்தின் பகுதி இதுவரை காணப்படவில்லை.

இன்னுஞ் சிலர் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகளுக்குக் குருந்த மரத்தடியில் சிவபெருமான் குருவா யெழுந்தருளிய காலை அவர் கையிலிருந்த புத்தகம் சிவஞானபோத மென்று கடவுண்மாமுனிவர் கூறியதைப் பெரிய பிரமாணமாக எடுத்

துரைப்பார். அக் கடவுண்மாமுனிவர்தாமும் சிவபெருமான் வைத்திருந்த சிவஞானபோதம் இரௌரவத்தின் பகுதியென்று தெரிவிக்கவில்லை. கடவுண்மாமுனிவர் காலம் சந்தான குரவர் காலத்திற்கு மிகவும் பிந்தியது. அவர் நூலுட் குறித்த சிவஞானபோதம் ஆசிரியர் மெய்கண்டார் மொழி பெயர்த்த சிவஞானபோத மென்பதற்குப் பிரமாணமில்லை. கடவுள் குருவடிவமாக எழுகின்றகாலை தமது திருக்கை யொன்றில் ஏடுவைத்திருத்தல் அவர்கொண்ட திருமேனியின் இலக்கணத்தின்பாற்படும். அதனை ஒரு சாரார் வேத மென்பர். ஒரு சாரார் ஆகமமென்பர். ஒரு சாரார் சிவஞான போதமென்பர். அவர் கூறுவனவெல்லாவற்றிற்கும்பொருள் அபரஞானக்குறி என்பதே கருத்தாகக் கொள்க. "சீதளப் பளிக்குமேனியும்" என்ற திருவிளையாடற் செய்யுளில் 'வேத புத்தகம்' என்ற வாக்கியங் காணப்படுகின்றது. அச்சொற் றொடரைக்கேட்ட துணையானே வைதிகர்கள் சிவபெருமான் திருக்கையில் வைத்திருந்தது 'எங்கள் வேதமே, எங்கள் வேதமே' என்று முழங்குதல் கூடும். வேதத்திற்குப் பொருளருளிச் செய்ய முன்வந்த பெருமான் எப்படித் தன் கையிலுள்ள வேதத்தை விரித்து ஒவ்வொரு சொல்லிற்கும் பொருள் கூறவில்லையோ அவ்வாறே அவர் குருந்த மரத் தடியில் எழுந்தபோதும் மணிவாசகப் பெருமானுக்குச் சிவ ஞான போதத்திலுள்ள பன்னிரண்டு சூத்திரங்களையும் விரித்துப் பொருள் கூறவில்லை. ஆதலால் அவர் திருக்கையி லிருந்த திருவேடு ஸ்ரீமெய்கண்டார் இயற்றிய நூலிற்கு முதனூலென்று கொள்ளப் போதிய சான்றில்லை. எவ்வா றாயினும் அது இரௌரவப் பகுதியென்று கொள்ளுதற்குப் பிரமாணம் யாதுமின்மை யறிக. இதுகாறுங் கூறியவற் றால் திருக்கயிலாய பரம்பரையில் வந்த ஞான நெறியினை ஆசிரியர் மெய்கண்டார் உணரப்பெற்றுச் சிவஞானபோத

நூலினை முதன் முதலில் இயற்றியருளினாரென்பதும், அவர் காலத்திலும் ஏனைச்சந்தான ஆசாரியர் காலத்திலும் அது மொழிபெயர்ப்பு நூல் என்ற கொள்கை ஏற்படவில்லை யென்பதும், அவர்கள் காலத்திற்குப் பின்னே வடமொழியிற் சிவஞானபோதம் மொழிபெயர்க்கப்பட்டதென்பதும், அதற்கு அவ்வடமொழிச் சிவஞானபோதத்தின் இறுதிச் சுலோகத்தின் இறுதி யடியே தக்க சான்றாகுமென்பதும், சிவஞான போத நூலே திருக்கயிலையிலிருந்து வந்ததென்று கோடல் உமாபதிசிவாசாரியார் கூறிய நூன்மரபொடு முரண்படுமென்பதும், அக்கொள்கையை ஒருவாறு வலியுறுத்தும் சிவஞான போதத்துச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் எழுந்தபின்னையே இரௌரவாகமப் பகுதியொன்று வடமொழிச் சிவஞான போதத்தைத் தன்னகத்துக் கொள்ளும் வண்ணம் ஏற்பட்டிருத்தல் கூடுமென்பதும், அந்த இரௌரவத்தைத் தழுவிய சிவாக்கிரயோகிகள் காலந்தொட்டே ஸ்ரீமெய்கண்டாரது சிவஞானபோதம் மொழி பெயர்ப்பென்ற பொய்க்கொள்கை உறுதிப்பட்டதென்பதும், அதற்குப் பின்னே வந்த கடவுண் மாமுனி முதலியோர் அக்கொள்கையை ஒருவாறு தழுவினரென்பதும், பின்னர் சிவஞான பாடியத்திலே அது இடம் பெற்றுத் தமிழ் மக்களால் அதற்குப் பின்னே சில காலத்திற்கு முன்வரை நம்பப்பட்டதென்பதும் உய்த்துணரப்படும்.



உ

# சிவஞான போதம்

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார் - தம்மை
உணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

## சூத்திரங்கள்

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையில்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்துளதாம்
அந்தம்ஆதி என்மனார் புலவர். ௧

அவையே தானே ஆயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையின்
நீக்க மின்றி நிற்கு மன்றே. ௨

உளதில தென்றலின் எனதுடல் என்றலின்
ஐம்புலன் ஒடுக்கம் அறிதலிற் கண்படின்
உண்டிவினை யின்மையின் உணர்த்த உணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா. ௩

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே. ௪

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. ரு

உணருரு அசத்தெனின் உணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையின் இசைக்குமன் உலகே. சு

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா. எ

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே. அ

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே. கூ

அவனே தானே யாகிய அந்நெறி
ஏக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே. ௧௦

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே. கக

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே. கஉ

# சிவஞான பாடிய சாரம்



சிவஞானபோத மங்கலவாழ்த்திலே கல்லால் நிழல் மலைவு இல்லாரை எடுத்துக் கூறியது மிகப் பொருத்தமே. இறைவன் கல்லால நிழலின் கண்ணே யிருந்து ஆதி நான்மறை முனிவர்க்கு நாலடைந்த கொள்கையா லேற்பட்ட மாலினை இல்லையாக்கினர். நந்திபெருமான் வாயிலாகச் சனற்குமாரர் முதலியோர்க்கு உண்மை யுணர்த்தினர். ஆதலால் அவர் கருணையை வேண்டினர் ஆசிரியர் மெய்கண்டார். அவர் கருணையைப் பரஞ்சோதி மாமுனிவர் வாயிலாகப் பெறுமுன், பொல்லாப் பிள்ளையாரே தமக்குக் கலைஞானம் நல்கினராதலின், பொல்லாப்பிள்ளையார் வழிபாட்டின் பயனை கல்லானிழலார் திருவருளுமாமென்று ஆசிரியர் குறித்தாரென்பாரும் உளர். இம்மங்கல வாழ்த்துச் செய்யுளை நூலானது பன்னிரண்டு சூத்திரமுடையதென்றும், முதல் ஆறு சூத்திரம் பொதுவும் பின்னாறு சூத்திரம் சிறப்புமாமென்றும், மும்மூன்று சூத்திரங்கள் ஒவ்வோரியலாக அமைந்த முறையே முப்பொருள் உண்மை அவற்றின் இலக்கணம், சாதனம், பயன், என்பவற்றை உணர்த்து மென்றுங் குறிக்குமாற்றினையும் பிறநயங்களையும் பாடியமுடையார் காட்டியதுபோல நுட்பமாகப் பிறர் எவருங் காட்ட வரிதாகும்.

அவையடக்கம், மிக அழகாக அமைந்தது. மெய்கண்ட பரமாசாரியர், தம்மையுந் தலைவனையு முணர்ந்தாரே, பேரவையெனக் கொண்டு அன்னோர்க்குத் தாம் உடைமையென்றமையால் அன்னோர் தம்முடைய உடைமையைப் போற்றுவதன்றி இகழ்தலில்லை யென்றுரைத்தார். பிறரது அறியா உரைகள் தம்முன் மாறுபடுவனவாய் மெய்ந்நயமுடையன வல்லவாகலான், அவற்றைத் தாம் ஏற்றுக் கோட

லாற் பயனில்லையென்பதை விளக்கினர். இச்செய்யுளைப் போல உண்மை நவிலும் அவையடக்கம் வேறியாதுமில்லை. இச்செய்யுளிற் புறனென்பது சித்தாந்த சமய மொழித் தொழிந்த புறச்சமயங்களைக் குறிக்கும். அவற்றின் கொள்கைகளைத் தெளிவாகவும் சுருக்கமாகவும் பாடியமுடையார் தொகுத்துரைத்தனர்.

புறப்புறச் சமயங்களாவன:—உலகாயதமும் நால்வகைப் பௌத்தமும், ஆருகதமாகிய சமண மதமுமாம். இவை கடவுளை ஒப்புக்கொள்ளாத சமயங்கள்.

உலகாயதம் கூறுவதாவது:—நிலம், நீர், தீ, காற்று, என்கின்ற நான்கு பூதங்களேயுள்ளன. இவற்றின் கூட்டுறவாலுண்டாகிய உடம்பின்கண் வெற்றிலைபாக்குச் சுண்ணாம்பின் கலப்பால் ஒரு சிவப்பு நிறமுண்டாதல்போல, ஓர் அறிவு தோன்றும். அஃதே உயிர். உடம்பிற்கு வேறாக உயிரில்லை. வினையென்பது கிடையாது. இன்ப துன்பங்கள் உடம்பிற்கு இயல்பாயுள்ளன. பெண்டிர்பாற் பெறுமின்பமே வீட்டின்பம். பிராணவாயு நீங்கில் உடம்பு நாசமாம். உலக இன்பத்திற்குரிய நெறியை யறிந்து உழவு, பசுக்காவல், வாணிகம், செங்கோன் முறைமை முதலியவற்றைக் கடைப்பிடித்து இம்மையில் நன்கு வாழ்வதே கடனும் என்பதே. இந்த உலகாயத மதத்தர், உடம்பே உயிரென்றும், ஐம்பொறியுணர்வே உயிரென்றும், பிராணனே உயிரென்றும், அந்தக் கரணங்களே உயிரென்றும் கூறுவாராகப் பலவகைப்படுவர். இந்தச் சமயமானது, ஒரு சமயமாக உலகத்தில் எடுத்துப் பேசப்படாவிடினும் இதன் கருத்துக்கள் மக்கள் வாழ்க்கையிற் பெரிதுங் காணப்படுதல் தெளிவு. கொள்கையாற் சைவ சித்தாந்திகளாயும் ஒழுக்கத்தில் உலகாயதராயுமிருப்பார் நம்மவருட் பலர்.

**புத்த மதம்** :—கௌதம புத்தரென்பார் வடநாட்டிலே கபிலவாஸ்து என்னுமிடத்திலே ஓர் அரச குடும்பத்திலே பிறந்தவர். இளமையிலே மனைவியையும் மக்களையும் பிரிந்து உலகத் துன்பத்திற்கு விடுதலை காண்பான், எங்கும் திரிந்து இறுதியாக ஒரு அரசமரத்தடியிற் றங்கி எவ்வுயிருக்கும் இரங்குதலே பேரறம், ஊன் பயில் வேள்வியும், உடலைத் துன்புறுத்துந் தவமும், மக்கட்கு வேண்டாதனவென்று கண்டனர். இக்கொள்கையைத் தமர்க்கும்பிறர்க்கும் எடுத்தோதினர். நல்லொழுக்கத்தை மட்டுமே போதித்தனர். கடவுளைப்பற்றி யாதுஞ் சொல்லவில்லை. அவர்க்குப் பின் வந்தவர்களும், அவர்கள் தலைவரும் புத்த சமயத்தைத் தனியே ஒரு சமயமாக்கிப் பிடக நூல் என்னுஞ் சமய நூலை வகுத்தனர். அந் நூலில் அறிவே ஆன்மாவென்று சொல்லப்பட்டது. அவ்வறிவானது ஒவ்வொரு கணப்பொழுதிலுந் தோன்றியழியும். முற்கணத்திற்றோன்றியழியும் அறிவின் வாசனை பிற்கணத்திற்றோன்றும் அறிவிற் பற்றுதலால் நீரோட்டம் போல அறிவு தொடர்ச்சியாக நிகழ்கின்றது. இவ்வாசனையழிவதே முத்தி. அதுவே நிருவாணம் எனப்படும், உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் இவ்வாறே கணந்தோறுந் தோன்றி யழியும் என்பதே புத்தமதக் கொள்கை. இவருள், மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகர், என நான்கு வகையார் உண்டு. மாத்தியமிகர் உலகப் பொருள்களெல்லாம் உண்மையிற் சூனியமே. உள்பொருளாயின் அழியா இல் பொருளாயின் தோன்றா: ஆனால் உணர்ச்சிக்குப் புலனாதல் போலுதலின் அவை தோற்றமே என்றகொள்கையுடையவர்கள். இவர்கள் பிடகநூல் சொன்னதைச் சொன்னவாறே கொண்டு மேல் வினவாமையால் மத்திய மாணாக்கரெனப்பட்டனர். யோகாசாரர் என்பார், புறப்பொருள் சூனியமாயின், ஞானமும், அத்தகைத்தோ என்று

தமது ஆசிரியனை வினவிய வழி, ஆசிரியன், ஞானமாத்திரம் உள்பொருள், அது இருவகைப்படும். வடிவம், நிறம் முதலியவற்றோடு கூடியதொன்று, அங்ஙனங் கூடாததொன்று. அகத்திலுள்ள ஞானமே புறத்துலகமாகத் தோன்றுவது என விடையிறுத்தான்.

சௌத்திராந்திகர் என்பார் புறப்பொருள் சூனியமென்பதனை மறுத்து, யான் இது கண்டேன் என்றபோது யான் என்னுமுணர்வு அகத்துப் பொருளும், இது என்று சுட்டியறியப்படுவது புறத்துப் பொருளும், ஆகலான் அகத்துப் பொருளும் புறத்துப் பொருளும் வெவ்வேறுள வென்றனர். அப்போது ஆசிரியன் கூறுவான் :—புறத்துப் பொருளும் உள்பொருளே அவை கணந்தோறுந் தோன்றி யழிதலின், அவற்றின் வடிவு முதலியன அறிவிற்பட்டு நீங்க, அறிவிற்பட்ட வடிவத்தையே அப்பொருளென அறிகின்றோம். பொருள்கள் அகச்சமுதாயம், புறச்சமுதாயமென இருதிறப்படும். புறச்சமுதாயத்திற்குக் காரணம், நிலவணு, நீரணு, தீயணு, வளியணு என்பன. அகச்சமுதாயம் என்பது சித்தமும் அதன் பகுதிகளும் ; அவற்றிற்குக் காரணம், உருவம், அறிவு, உணர்ச்சி, பெயர், தொழில் என்னும் ஐவகைக் கந்தங்கள். சித்தத்திலே சிந்திக்கப்படும் சுவை ஒளி, ஊறு நாற்றம் முதலியன உருவக்கந்த மெனப்படும். உருவக்கந்தத்தை உணருமுணர்வுகள் அறிவுக்கந்தம். அது, பொது, சிறப்பு என இருவகைத்து. இவ்வறிவிற்றோன்றும் இன்பத்துன்பங்கள் வேதனைக்கந்தம். பொருள்களின் பெயர்கள் குறிக்கந்தம் ; பொருள்களின் தொழில்கள், வாசனைக்கந்தம். கந்தமென்ற சொல் கூட்டமென்று பொருள்படும். உருவம், ஞானம், வேதனை, குறி, வாசனை என்பவற்றின் தொகுப்புகள் உள்ளத்துணரப்படுதலின், அவை அகச்சமுதாயமாம். எனவே, இங்ஙனங் கூறிய விடையைக் கேட்டு இவ்வாறு

கேட்பதற்குத் தக்கவாறு விடையறிவுறுக்குஞ் சூத்திரங்கள் எவ்வளவிலே முடியுமென்று வினவிய மாணாக்கர்கள் சூத்திரஅந்த மியாதெனக் கேட்டமையின், சௌத்திராந்திகர் எனப்பட்டனர்.

வைபாடிகர், புறப்பொருள் காட்சிப் பொருளே என்ற கொள்கையுடையார். நால்வகைப் புத்தசமயத்தவரும், க்ஷணிபங்கவாதமும், ஞானமே ஆன்மாவென்ற கொள்கையும் பொதுவாகத் தழுவுபவர்கள். புத்தமதமானது பிற்காலத்திலே, வடநாட்டிலே, பெரு வழி, சிறு வழி யென்று இரு பகுதிப்பட்டது. தெய்வ வணக்கம், காயசித்தி முதலியவற்றோடு கூடிய நெறியாகிய பெரு வழியே சீனநாடு முதலியவற்றிற் பரவிற்று. சிறு வழி பொது மக்களுக்கு ஏற்புடைத்தன்றாயிற்று. தென்னாட்டிற்கு அசோகன் காலத்தே வந்தது, கலப்பில்லாத புத்தமதமாகிய 'சிறு வழியே'. சிவஞான சித்தியார் பரபக்கத்திலே விரிவாக ஓதி மறுக்கப்பட்டது சௌத்திராந்திகக் கொள்கையாம்.

இனி அருகன் என்னுங் கடவுளை வணங்குவதால் ஆருகதமென்னப்பட்ட சமயமே, சமண மதமென்பது. ஜைன மதமென்பதும் அதுவே. ஜினன் என்ற பெயர் அருகனுக்குண்மையால், ஜைனம் என்றதும் அக்கடவுள் மதமே. புத்தமதம் போலக் கொல்லாமையை வற்புறுத்தலே, இச்சமயம் வடநாட்டிலே, இடபதேவர் மகாவீரர் என்போரால் நிறுவப்பட்டது. இச்சமயத்தார் புத்தரினுஞ் சிறந்த தத்துவக் கொள்கையுடையவர். சீவன், அசீவன், ஆச்சிரவம், சமுவரம், நிர்ச்சரம், பந்தம், வீடு எனப்பொருள்கள் ஏழு என்பது அவர்கள் கொள்கை. உலகம் கடவுளாற் படைக்கப்படவில்லை. வினைகட்குப் பயனை யூட்டுவான் கடவுளில்லை. சிவன் அநாதி சித்தன், முத்தன், பெத்தன் என மூவகைப்படும். அநாதி சித்தன் அருகக் கடவுளே. முத்தன் கட்டு

நீங்கிய வுயிர். பெத்தன் கட்டுண்ட வுயிர். உடம்பு தோறும் சீவன் வெவ்வேறுவன்.

பெத்தர்கள், மக்கள், தேவர், நரகர், விலங்குகள் என நாற் பகுதிப்படுவர். அசீவன் புற்கலமும், ஆகாயமும், தன்மமும், அதன்மமும் என நால்வகைப்படும். நான்கு பூதங்களும், மர முதலியனவும் பை, முட்டை முதலியவற்றிற் பிறப்பன வும், புற்கலமெனப்படும். இவற்றிற்குக் காரணம் பரமாணுக் கள். ஆகாயம், உலகங் கடந்தது; உலகங் கடவாதது என் றிருவகைப்படும். முன்னது எல்லையற்றது. தன்மமும், புற் கலத்திற்கு வேறாய் நன்மை பயப்பது. அதன்மம் தீமை பயப்பது. ஆச்சிரவமென்பது கன்மத் தொடர்ச்சி. சமு வரம் என்பது இரக்கமும் அடக்கமுமாம். நிர்ச்சரம் என் பது உடலைத் துன்புறுத்துங் கடுந்தவம். பந்தமென்பது, இருப்புக் கூடானது, அதன்கணுள்ள சுரைப் பழத்தை அழுத்துவதுபோல, சீவனுடைய சுதந்தரத்தை அடக்கி நிற்குந் தீக்குணங்கள். வீடென்பது பந்தமற்றுச் சுதந்தரம் பெற்று உலகங் கடந்த ஆகாயத்திற் செல்லுதல்.

சமணர் கூறும் எழுவகைப் பதார்த்தங்களையும் உண் டென்றுதல் இல்லையென்றுதல் கூறாது, உண்டாம், இல்லை யாம், உண்டுமில்லையுமாம் முதலிய எழு முடிவுகளுடன் கூறு வாராதலின், அவர் கொள்கை அநேகாந்த வாதமெனவும் சத்தபங்கி நியாயமெனவுங் கூறப்படும். நிகண்டவாதிகள் ஆசிகவர் என்றிருதிறப்படுவர். நிகண்டவாதி மதமே மேற் கூறப்பட்டது. ஆசீவகர், நிலம், நீர், தீ, கால், உயிர் என் னும் ஐந்தினையும் ஐந்தான்மாக்களென்ற கொள்கையுடைய வர். பிறவேறுபாடுகளைச் சிவஞானசித்தியுட் காண்க.

இனிச் சிவாகமங்களை ஒப்புக்கொள்ளாது வடமொழி வேதத்தைப் பிரமாணமாகக் கொண்டு எற்பட்ட ஆறு சம யங்களை புறச் சமயங்களெனப்பட்டன. இவற்றையே வேத

வாதியர் ஆறு தெரிசனம் என்றும், இவற்றின் நூல்களையே ஆறு சாத்திரமென்றுங் கூறுவர். இவற்றுள் கணாத முனிவர் செய்த வைசேடிகமும், கௌதமர் செய்த நியாய சூத்திரமும் தருக்கமென்னப்படும். இரண்டிற்கு சிறுபான்மையே வேற்றுமையுடையன. இவைகள் ஐம்பூதங்களையும், காலம், திசை, மனம், உயிர், கடவுள் என்பனவற்றையும் ஒப்புக்கொள்ளுவன. கடவுள் எல்லாம் வல்லவன். அவன் திருவுள்ளப்படி உலகந் தோன்றி யொடுங்கும். அவன் செய்த நூல் வேதம். உயிர்கள் வினைக்கிடாகப் பிறப்புடையன. மனம் அணுவளவினதாய் உயிர்தோறும் வெவ்வேறா யிருக்கும். மனத்தொடு கூடாமற்போனால் உயிர்க்கறிவில்லை. மனமற்ற விடத்தே உயிர் கற்போலக்கிடக்கும். அதுவே முத்தி யென்பர். வைசேடிகர் முத்தியில் ஆனந்தம் உண்டென்பர். சமணரையும் புத்தரையும் போலத் தார்க்கிகரும் அணுகாரண வாதிகளே. முன்னிரு சமயத்தாரும் அணுக்கள் ஒருங்கு சேர்ந்து காரியப்படுமென்பர். தார்க்கிகர் இறைவன் விருப்பத்தாற் பரமாணுக்களிலே செயல் தோன்றும் என்றும், இவ்விரண்டாகவும் மும்மூன்றாகவும் அணுக்கள் சேர்ந்து காரியப்படுமென்றுங் கூறுவர். தார்க்கிக சமயத்தார் செய்த பெருநன்மை யாதெனில், கடவுளால் உலகம் தோன்றி யொடுங்கு மென்பதை மேற்கொண்டதே.

மீமாஞ்சக ரென்பார் வேதக் கருமகாண்டத்திற் குறித்த கிரியைகளையே முக்கியமாகக் கொள்ளுவர். சைமினி யென்னு முனிவராற் செய்யப்பட்ட நூல் மீமாஞ்சையாம். வேதம் ஒருவராற் செய்யப்படாது நித்தியமாகவுள்ளது என்ற கொள்கை இச்சமயத்திற் காதாரமானது. வினையே பயன்களை யுதவும்; ஆன்மாக்கள் பல; கடவுள் இல்லை. உலகம் என்றும் நிலை பெறுவதாம் என்பன இம்மத முக்கியக்கொள்கைகள். சைமினி சூத்திரத்திற்குப் பாடியஞ் செய்தவன் சபரமுனிவன். சூத்

திர வழியாக ஒருசமயம் வகுத்தவன் பட்டாசாரியன் என்பவன். பாடிய வழியாகக் குருமதமெனப் பிறிதொரு சமயந் தோற்றுவித்தவன், பிரபாகரன். மீமாஞ்சை நூலின் பன்னிரண்டத்தியாயக் கருத்துக்களையும் ஆசிரியர் சிவஞான யோகிகள் திராவிட மாபாடியத்திற் றொகுத்துள்ளார். மீமாஞ்சகன் சமணனது நிலையில் உள்ளவன்; கடவுட் கொள்கை யில்லாதவனுதலின், இவன் தார்க்கிகனிலுங் கீழ்ப்பட்டவன். சைமினி நூல் பூர்வமீமாஞ்சை யெனப்படும்.

உத்தர மீமாஞ்சை யென்பது வியாசர் செய்த ஏகான்மவாத நூல். ஏகான்மவாதம் என்பது நால்வகைப்படும். மாயாவாதமென்பது, பிரமமாகிய கடவுள் உள்ள பொருள்; உலகம் உயிர்களாகிய ஏனையன தோற்றமே ; இத்தோற்றத்திற்குக் காரணம் பிரமம் மாயையொடு தொடர்புற்று அதன் வாயிலாகப் பிரதி பலித்தலே ; அந்த மாயை யாதெனில் அது இன்னதென்று சொல்ல வொண்ணாதது. இம்மாயைக்கு வேருகவுள்ள பிரமம் யானென்றறிவதே முத்தி என்ற கொள்கை யுடையது.

பாற்கரியவாத மென்பது, பிரமமே சடமும் சித்துமாய உலகமாயிற்று. அங்ஙனம் விகாரப்பட்டமையை அறியாமையாற் பந்தமாயிற்று. வேதாந்த ஞானத்தால் உடம்புக்கு வேருக ஆன்ம ரூபம் விளங்கும். அதன்கண் ஒடுங்குதலே முத்தி யென்ற கொள்கைத்து.

கிரீடாப் பிரமவாதமென்பது, பிரமம் யானே ; நிகழ்பவை யெல்லாம் என் விளையாட்டென்றறிவதே முத்தி என்பது. சத்தப் பிரம வாதமென்பது, முடிவுகாலத்தில் பிரமம் சத்தவடிவா யிருக்கும்; அதுவே அவிச்சையால் சடமுஞ் சித்து மாய உலகங்களாமென்ற கொள்கையுடையது.

சாங்கியக் கொள்கையாதெனில், சடவுலகம் குணதத்துவத்தினின்று உண்டாகிறது. சத்துவம், இராசதம்,

தாமதம் என்ற மூன்று குணங்களும் ஒப்ப நின்ற நிலையிலே அது பிரகிருதி தத்துவமெனப்படும். அது எல்லாவற்றிற்கு மூலமானதால், மூலப் பிரகிருதியாம். இதற்குக் கீழ் உள்ள பூதமைந்து, பூத நுட்பங்கள் (தன் மாத்திரை) ஐந்து, அறிவுப் பொறி ஐந்து, தொழிற் பொறி ஐந்து, மனம் புத்தி அகங்காரம் என்னும் இருபத்துமூன்று தத்துவங்களாலாகியதே உலகம். ஆன்மாக்கள் பல. அவை அறிவு வடிவாயிருப்பன. மூலப் பிரகிருதியின் திரிபு வடிவாகிய புத்தியைச் சார்ந்து உயிர்கள் கட்டுப்பட்டமையால் அவைகட்கு இன்பத்துன்ப உணர்வு தோன்று நின்றது. மூலப் பகுதியினின்று தன்னைப் பகுத்துணர்வதால், அவிச்சை நீங்கி முத்தி உண்டாம். இதன்கண் சற்காரிய வாதம் சொல்லப்படுகின்றது. ஆசிரியர் பரிமேலழகர் 'சுவையொளி' என்ற திருக்குறளுரையிலே சாங்கியக் கொள்கையை எடுத்தாண்டனர். சமணனைப் பார்க்கிலும் சாங்கியன் உலக மூலத்தைக் காண்பதில் வல்லவன். சமணன் அணுகாரணவாதி; சாங்கியன் பிரகிருதிவாதி. இருவருங் கடவுளில்லாக் கொள்கையரே. சாங்கிய நூல் செய்தவன் கபில முனிவன்.

**யோக மதம்:**—பதஞ்சலி முனிவரால் யோகக் கொள்கை நிறுவப்பட்டது. சாங்கியக் கொள்கையோடு முத்திக்கு யோகமும் வழியே யென்பதும், இறைவன் ஒருவன் உளன், அவன் முற்றுணர்வுடையோனாய் உயிர்கட்கு ஞானத்தை அறிவுறுப்பனென்பதும் யோக மதத்திற் சிறப்பாய்க் காணப்படுவன. தார்க்கிகனினும் யோக மதத்தான் ஒரு வகையாற் கீழ்ப்பட்டவனே. என்னை? தார்க்கிகன் கடவுளால் உலகம் தோன்றி யொடுங்கு மென்பான்; யோகமதத்தான் கடவுள் கலைஞானமாத்திரம் அறிவிப்பனென்பான்.

மேற்கூறிய வைசேடிகம், நியாயம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகமென்னுமாறுமே, வைதிகர்களால்

ஆறு சமயமெனப்படும். பாஞ்சராத்திரம் வேதத்திற்குப் புறம்பானது. அக்காரணம் பற்றி வைதிகர்களால் கழித்தொதுக்கப்படுவதுபோலச் சைவர்களால் சிவாகமத்திற்குப் புறம்பென்று அது கழிக்கப்படும். மேற்சொன்னவற்றுள், வைசேடிகம், நியாயம் என்னு மிரண்டையும் 'தருக்கமதம்' என்பதனுள்ளடக்கிப் பாஞ்சராத்திரத்தை ஆறுவது புறச் சமயமாக வைத்து மறுத்தல் சித்தாந்த நூன் மரபு.

**பாஞ்சராத்திரம்** சாங்கியத்தைப் போல இருபத்து நான்கு தத்துவங்களையு மொப்புக்கொண்டு இருபத்தைந்தாந் தத்துவமாக வாசுதேவன் என்று ஒரு பரம்பொருள் உண்டு என்றும், அவனிடத்திற்றோன்றிய நால்வரால் சித்துஞ் சடமுமாகிய எல்லாம் படைக்கப்பட்டமையால் எல்லாம் வாசுதேவனது திரிபே என்றும், வாசுதேவனது உருவில் ஒடுங்குதலே முத்தியென்றுங் கூறும். இது ஏகான்ம வாதத்துடன் பாற்கரிய வாதம்போன்றிருப்பது. பால் தயிரானாற்போலக் கடவுள் உலகமானுரென்பது பாஞ்சராத்திரக் கொள்கை. சித்துஞ் சடமுமாகிய உலகத்தின் மூலமாகிய மூலப்பகுதி பாலுக்கு உறைமோர்போலு மென்பாருமுளர். எவ்வாறாயினும் வாசுதேவன் சடத்தொடு கலந்தே சித்துப் பொருளாகிய உயிரைப் படைத்தான் என்பராகலின், பாஞ்சராத்திரம் ஏகான்ம வாதச் சார்புடையதே. சித்துப் பொருளாகிய உயிர் கடவுளாற் படைக்கப்படவில்லை யென்று நிறுவிப் பாஞ்சராத்திரக் கொள்கையை இராமநுஜர் மறுத்தா ரென்பாருமுளர். இறைவன் அழியா உருவுடையனென்றும் அவ்வுருவிலொடுங்குதலே முத்தி யென்றும் வைணவர் கூறுதலால் இறைவனுக்கும் உயிருக்கும் உருவுடைய சடத்தின் சம்பந்தம் எக்காலமு முண்டென்பது பெறப்படும். படவே, பேரறிவுடைய பரம்பொருளொடு சிற்றறிவாகிய உயிர்கள் கலந்தின்புறும் பெருமுத்தி அவர் அறியாததென்பது தெளிவு.

இனி ஆகமங்களை ஒப்புக்கொண்டும் அவற்றிற் கூறப்பட்ட முப்பொருளை ஒப்புக்கொள்ளாது, பரமசிவனே கடவுள் என்பதை மாத்திரங் கொண்டு சிறுபான்மை புறச்சமயக் கொள்கைகளைத் தழுவுஞ் சமயங்களாகிய அகப்புறச் சமயங்களை ஆய்வாம்.

பாசுபதம் என்பது கடவுள் உண்டு. உயிர்கள் பல. உயிர்களுக்கு ஆணவமல மென்பதில்லை. மாயையினாலும் கன்மத்தினாலும் உயிர்கள் துன்புறுகின்றன. பற்றற்றுச் சிவதீக்கைபெற்றவனிடம் கடவுளுடைய ஞானம்பற்றும். ஞானம் பற்றிய உயிர்கள்பால் கடவுள் தன் குணங்களை வைத்துவிட்டுத் தான் அதிகாரத்தின் ஒழிவுபெற்றிருப்பன் என்ற கொள்கையுடையது. பாசுபத மதத்தினர் சிவசங்கிராந்த சமவாதியெனப் படுவர். இவர்கள் சுத்த தத்துவங்களைப்பற்றி யாதும் அறியாதவர்கள்.

மாவிரதம் என்ற மதமுடையாரும் பாசுபத மதத்தினரைப் போன்ற கொள்கையுடையவரே. தீக்கை பெற்று எலும்பு மாலையணிதல் முதலிய சில விரதங்களை மேற்கொண்டு உயிர்கள் முத்தியெய்தற்பாலன என்பர். இவர்கள் முத்திநிலையில் உயிர்களுக்குச் சிவனோடு சமமாக எல்லாக் குணங்களும் உற்பத்தியாகின்றன என்ற கொள்கையுடையவர்கள் ஆதலால் உற்பத்தி சமவாதியெனப்படுவர். காபால மதத்தினரும் இவ்வாறே உயிரியல்பும் பந்த வியல்புங் கூறுவர். தீக்கை பெற்றுப் பச்சைக் கொடியேந்தி நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்பவர் முத்தராவர். அவர்கள் சிவனால் ஆவேசிக்கப்பட்டு எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பதால் இவர்கள் ஆவேச சமவாதி யெனப்படுவர். காளாமுக மதத்தினர், இறைவனைப் போற் புலியதள் முதலியன அணிவதையும் சாம்பவ மதத்தினர் திருநீற்றினை உடம்பு முழுவதும் அணிவதையும் சிறந்த

கடமையாகக் கொள்ளுவர். அவர்களெல்லாரும் காபால மதத்தாரோடொத்த தத்துவக் கொள்கையுடையவரே.

வாமமதமும் வைரவ மதமும் முறையே சத்திவழிபாட்டையும் வைரவ வழிபாட்டையும் மேற்கொண்டனவாயினும், பாஞ்சராத்திரம் போலக் கடவுளுக்குப் பரிணமங் கூறுதலும் கடவுளுருவிலொடுங்குதலே முத்தியென்றலும் உடைமையால் புறச்சமயத்தோடொத்த இயல்புடையனவே.

ஐக்கிய வாத சைவரென்பார் பிறஅகப்புறச் சமயத்தாரினுஞ் சிறந்தவர். முப்பத்தாறு தத்துவங்களை யொப்புக் கொண்டாலும், ஆணவ மலத்தை ஒப்புக் கொள்ளாதவர்கள். உயிர் கடவுளோடு கலப்பது நீரும் நீரும்போல வென்றலின், இவர்களும் ஒருவகையாற் சிவசம வாதியரே.

அகப்புறச் சமயங்கள் ஆணவமல முண்மையை யறியாதனவாய்ச் சிவசமவாதச் சார்புடையன. ஐக்கியவாத மொழியப் பிறசமயங்கள் சுத்தத்துவ வுணர்ச்சி யில்லாதன.

இனி, அகச்சமயத்தினர் யாவரும் சைவசித்தாந்திகள் போலக் கடவுள், உயிர், சுத்தமாயை, அசுத்தமாயை, ஆணவம், கன்மம் என்ற ஆறு பொருளையும், அல்லது பதி, பசு, பாசமென்ற முப்பொருளையும் ஒப்புக்கொண்டவர்கள். இவற்றினியல்பு கூறுமிடத்துச் சைவசித்தாந்தியினின்று வேறுபடுவர். அகச்சமயங்களாவன :—பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சிவசங்கிராந்த வாதம், ஈசுர அவிகார வாதம், சிவாத்துவிதம், சுத்தசைவ மென்பன.

சுத்த சைவத்தை வேறு சமயமாகவைத் தெண்ணாது பிற ஆறினையுமே அகச்சமய மென்ப. பாடாணவாத மதத்தினர், தார்க்கிகர்போல, முத்தியில் ஆன்மா யாதொரு அனுபவமுமின்றி ஆணவமலத்தோடு கல்லுப்போலக் கிடக்குமென்பர். பேதவாதியர் உயிர் ஞானம் பெறுவதே முத்தியென்பர். உயிர் கடவுளோடு கலக்கவேண்டிய தில்லை. தாமி

ரம் பொன்னாவதுபோல, பெத்தவுயிர் முத்தி யுயிராகின்ற தென்பது அவர்கள் கொள்கை. சிவசம வாதியர், உயிர் சிவனுக்குச் சமானமாய்ச் சிவனைப்போல ஐந்தொழில் நடத்து மென்பர்.

இவர்கள் கொள்கை பலகடவுளர் கொள்கைக்கு இடந் தரும். இவர்களே அரூப சிவசமவாதியர். அகப்புறச் சமயத்தாருட் சிலர் உருவ சிவசம வாதியர். சங்கிராந்த வாத சைவ ரென்பார், ஆன்மாவானது, காந்தம்போல விகார மின்றி நிற்க, அதன் முன்னே இரும்பு காரியப்படுமாறு போல, பிராணவாயு உடலைக் காரியப்படுத்தும். ஐம்பொறி களும் பொருள்களை நுகரும்; அந்தக்கரணங்கள் பொருள் களை யறியும். அந்தக்கரணங்கள் பொருள்களை யறியாமல் ஐம்பொறிகள் அவற்றை நுகர்வதில்லை. பிராணவாயு வின்றி உடல் செயலறும், பக்குவம் வந்த விடத்து, இறையருள் உயி ரிலே பிரதி பலிக்கும். விறகிற் கொளுத்தின தீ விறகைக் கெடுத்து விடுதல்போல, உயிர் கெட்டுக் கரணங்களெல்லாம் சிவகரணமாய்க் கடவுளை யறியும், உயிர்க்கு யான் என்ற உணர்ச்சி கிடையாது என்பர்.

ஈசுர அவிகார வாதிகள்:—கன்மப் புசிப்பால் ஆணவம் நீங்கிய உயிர்கள் ஞானமாகிய விளக்கைப் பெற்று, மர நிழல் போல விகாரமின்றியிருக்கிற கடவுள் திருவடியிற் சேர்ந்து இன்ப முறுவர். இதனால் சிவன் வந்துணர்த்தாமல் தானே சிவஞானத்தைப் பெறும் என்றதே ஒப்புக் கொள்ளக்கூடா தது. கண் திறக்கப் பெறாமல், குருடன் ஒளியைக் காண்ப தில்லை யென்பதே சித்தாந்தக் கருத்து.

சிவாத்துவித சைவரென்பார் உலகமெல்லாம் சிவவடி வம், அருவமா யிருப்பது சிவம், உருவமா யிருப்பது சிவ சத்தி, முத்தியிலே உயிர் என்ற ஒரு முதலில்லையாகச் சிவம் பிரகாசிக்கும், உயிர் சிவமேயாய்ப் போய் விடுமென்பர். முத்

தியிலும் உயிர் பொருட்டன்மையால் வேறேயுளதென்ற சைவ சித்தாந்தக் கருத்திற்கு இது மாறுபட்டது. சுத்த சைவரென்பார், உயிராவது சகல நிலையில் அறிவோடிருந்து, ஆணவ மலச்சார்பால் அறிவு கெட்டதென்றும், சகல நிலையே அநாதி நிலை யென்றும், சரியை கிரியை யோகமே ஞானந் தருமென்றுங் கூறுவர். இவர் சைவ சித்தாந்தத்தின் நுட்ப மறியாதவர். இவரைச் சைவ வாதியரென்றனர் உமாபதி சிவாசாரியார்.

இது காறுங் கூறியவாற்றல் இச்சமயங்களெல்லாம் உலகம் உண்டு. உலகமும் உயிர்களு முள்ளன. கடவுளும் உயிர்களும் உலகமும் உள்ளன. கடவுளும், உயிரும் முடிவில் ஒரு பொருளே ; இரண்டும் முடிவிற் சமமாவனவே, என்ற கொள்கைகளே பல சமயக் கொள்கைகளாயின. வினை யுண்டு, மாயையுண்டு, மூலமலம் உண்டு என்பதிலும் சமயி கள் வெவ்வேறு கொள்கையுடையவர்களே. இவற்றின் இயல்பு கூறுமிடத்தும் வெவ்வேறு கருத்துக்கள் எழுந்து நிலவின. புறப்புறச் சமயமும், புறச்சமயமும் சிவஞான சித்தியார் பரபக்கத்திலே யாய்ந்து மறுக்கப்பட்டன. ஏனை யன, சங்கற்ப நிராகரணத்திலே விதந்தோதிக் கண்டிக்கப் பட்டன.

இனி, சைவசித்தாந்தக் கொள்கை கூறுஞ் சிவஞான போத நூலாராய்ச்சி, இயற்றற்பாலது. முதற் சூத்திரக் கருத்து வருமாறு :—அவன், அவள், அதுவென்று மூன்று பகுதிப்படும் உலகத்தொகுதி தோன்றுதல், நிலைபெறுதல், அழிதல் ஆகிய முத்தொழிற்படுதலால், அது ஒருவனல் தோற்றுவிக்கப்பட்டு, நிலைபெறும் பொருளே. அது யாரால் தோற்றுவிக்கப்படு மெனின், அது ஒடுங்குதற்குக் காரண மான 'ஒடுங்கி' யால் என்க. அவன் என் மீளவும் உலகத் தைப் படைக்கிறுன் என்னில், உயிர்களுடைய ஆணவ மலம்

கழிதற்குப் பக்குவப்படும்பொருட்டு. சூத்திரத்தில் 'ஒடுங்கி மலத்துளதாம்' என்பதற்கு, கருமமலம் பக்குவப்படுவதற்காக ஒடுங்கி, மீளவும் உளதாம் என்பாருமுளர். இனி, குடத்திற்கு மூலமாய மண்போலச் சட உலகத்திற்கு மூலமாய மாயையும் மலமெனப்படுதலின், 'ஒடுங்கி மலத்துளதாம்' என்பதற்கு மாயையினொடுங்கி மீளவும் அதன்கணின்று உண்டாமென்பாருமுளர். உலகம் ஒடுங்குதற்குக் காரணமான முதல்வனால் உலகம் உண்டாதலின், அந்தத்தைச் செய்யுங் கடவுளே ஆதியுமாவன் என்றார் ஆசிரியர்.

உலகத் தொகுதியென்பது, முப்பத்தாறு தத்துவங்களிலுமுண்டாகிய அண்டங்களும் அவற்றைச் சார்ந்த புவனங்களுமாம். அவற்றுள், இருபத்தைந்து தத்துவங்கள் பிரகிருதி மாயையிலும், ஆறு தத்துவங்கள் அசுத்த மாயையிலும், ஐந்து தத்துவங்கள் சுத்தமாயையிலுமுள்ளன. சுத்த மாயையிலுள்ள ஐந்து கலைகள் எல்லாத் தத்துவங்களிலும் வியாபித்திருக்கும். அவை நிவிர்த்திகலை (=நீததற்கலை) பிரதிட்டாகலை (=பதிவுகலை) வித்தியாகலை (=புலக்கலை) சாந்தி (=அமைதிகலை) சாந்தியாதீதகலை (=அமைதிமேற்கலை) என்பன. ஒவ்வொரு கலையினுட்பட்ட முதல்களையும் உலகுகளையும் ஒடுக்குதற்குக் காரணமான கடவுளர் வெவ்வேறனர். தூயமாயா வுலகங்கள் முடிய யாவற்றையுஞ் சங்காரஞ் செய்யும் முதல்வனாகிய பரமசிவனே முழுமுதற்கடவுள். ஆதலின், முதற் சூத்திரக் கருத்துரையுள், ஆசிரியர் சங்கார காரணனென்று மாத்திரங் கூறாது 'சங்கார காரணனாகிய முதல்வனை' என்றார்.

முதற் சூத்திரத்தினை ஆசிரியர் மெய்கண்டார், மூன்று அதிகரணமாகப் பகுத்துரைத்தார். அதிகரணம், வகையின் விரிவைச் சுட்டுகின்றது. ஒவ்வொரு அதிகரணத்திற்கும் ஏதுவும் காட்டும் உரைத்தனர். அதிகரணப்பொருளும் ஏதுவும் உரைச் செய்யுளாலும், உதாரணம், வெண்பாவாலும

இயம்பப்பட்டன. சில அதிகரணங்களில், ஒன்றிற்கு மேற்பட்ட வெண்பாக்களுள்ளன.

முதல் அதிகரணக் கருத்து :—உலகமானது, ஒருவன், ஒருத்தி, ஒன்று என்று சுட்டப்படுகிற அவயவப் பகுதிகளை யுடையது. ஆடையானது நூல்களை அவயவமாக வுடையது. வேறு வேறு பிரித்தற் குரியதையே அவயவமாக வுடையது, பொற்கட்டியில் வெட்டிய ஒரு சிறு துண்டை அவயவ மென்பதில்லை. உலகம், நிலம், கடல், மலை முதலிய அவயவப் பகுப்புடையது. இற்றைக் காலத்திலே, மேலை நாட்டினர் சில தனிப்பொருள்களின் கலப்புக்களாலே, எண்ணிறந்த சடப்பொருள்கள் உளவாயின வென்றும், அத் தனிப் பொருள்களை நுண்ணிதின் ஆய்ந்து பார்க்கின் ஒரு சடசத்தியின் வெவ்வேறு திரிபுகளே அவையாமென்றும் அறிவியல் நூல் (Science) வாயிலாக நிறுவுவர். இந்நாட்டுத் தத்துவக் கொள்கைப்படி, உடல்களும் பிறபொருள்களும் ஐம்பூதங்களாலாயவை. ஐம்பூதம் தன் மாத்திரையினின்றுவந்தன. தன் மாத்திரை அகங்காரத்தினின்றும் வந்தன. அதற்கு மூலம் குண தத்துவம். அதற்கு மூலம், மூலப்பிரகிருதி. அதற்கு மூலம் கலை. அதற்குமூலம் அசுத்த மாயை. அசுத்த மாயை சுத்தமாயையின் கீழடங்குவது. எனவே, சடப்பொருள்களெல்லாம் ஒரு அடிப்படையான பொருளில் நின்று மெழுவன. அவை தோன்றுகின்றன. தோன்றிய வடிவோடு நிற்றலுங் காண்கின்றோம். தோன்றிய மூலத்திற்கே சென்று மறைவதே அழிவென்கின்றோம். ஆதலால், அவை, தோற்றம், நிலை, இறுதியுடைய பொருள்கள். தோன்றி நிற்கும்போது, அவை சுட்டியறியப்படும் பொருளாயுள்ளன. சுட்டியறியப்படும் பொருட்டொகுதியே உலகம். சுட்டுப் பொருள்கள் மறைந்து சுட்டப்படா நிலையடைதல் போல, அவை பலவற்றின் தொகுதியாய உலகமும், மறைந்து

சுட்டப்படா நிலையடையுமென்க. எப்பொழுது சுட்டற்ற மூலத்தில் நின்று சுட்டப்படும் பொருள் தோன்றிற்றோ, தோன்றியவாறே அது மறைதற்குரியதே. தோற்றத்திற்கு மறைவிற்கு முள்ள இடையிலே நிலை யெனப்படும். இதனாலே, ஆசிரியர், தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடப்பதென்றார். ஒருவகையான பயிர்களோ, உயிர்களோ, ஒரு காலத்திலே முழுவதுந் தோன்றி ஒரு காலத்தே முழுவதும் அழிவது காணப்படும். அவ்வாறே அவற்றின் தொகுதியாய உலகமுமாம் என உணர்க என்பதே இவ்வதிகரண உதாரணச் செய்யுட் கருத்து.

முதற் சூத்திர இரண்டாம் அதிகரணப் பொருள் வருமாறு:—உலகம் ஒடுங்கித் தோன்று வகையாயிற்று என்றால், தோன்றுதுள்ள பொருளே உலக மூலமாமேயன்றி உலகம் அழிந்து சூனியமாயிற்றென்பதில்லை. சூனியத்தில் நின்று ஒன்றுந் தோன்றாதென்பார், 'இல்லதற்குத் தோற்ற மின்மையின்' என்றார். உள்ளதொன்று தோன்றுங்கால் எதன்கண் நின்று தோன்றிற்றோ, அதன்கணின்று தோன்றும். எப்படி ஒடுங்கினதோ அப்படியே தோன்றும். நெல்லானது வித்தினின்று எப்படித் தோன்றுகின்றதோ, அது போலவென ஆசிரியர் சிவஞான முனிவர் அதனை விளக்கினர். நெல்வித்தினின்று நெல் முளைப்பதன்றிக் கமுகு கிளைவதில்லை.

என் ஒடுங்கியது மீளத்தோன்றுமெனின், 'இலயித்தது அம், மலத்தால்' எனச் சூத்திரத்திற் கூறுவதை வலியுறுத்தினர்.

சடவுலகமானது அதன் மூலமாகிய மாயையிலே ஒடுங்கினாலும், அம்மாயைக்கு ஆதாரமாயுள்ள முதல்வனால் ஒடுங்குமாதலானும், அவனாலேயே மீள உண்டாமாதலானும், "ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி யில்லை" யென்று ஆசிரியர் அருளிச் செய்தனர். காத்தற் கடவுளால் உலகம்

தோன்றி யொடுங்கு மென்பாரை நோக்கி, காத்தற் கடவுளை இருபத்தைந்தாந் தத்துவமென்று கூறுபவரே அவ்வாறு கூறுதலின், நில முதல் மூலப்பகுதி வரையுள்ள இருபத்து நான்கு தத்துவங்களே அக்கடவுளால் ஒடுங்குதல் கூடும். இருபத்து நான்காந் தத்துவத்திற்கு மேற்பட்ட தத்துவ புவனங்களை யொடுக்குங் கடவுள் வேறேயுளன். அவன் இருபத்தைந்தாந் தத்துவத்தை யொடுக்கும்போது அத் தத்துவக் கடவுளையும் அவனுக்குக் கீழ்ப்பட்ட அயனையும் ஒடுக்குவன் என்றார். மேலும், வாசுதேவனே மூலப் பிரகிருதி யென்பார்க்கு மூலப் பிரகிருதியாகிய தத்துவம் ஒடுங்குங்கால், வாசுதேவனும் ஒடுங்குமென்பது போதரும்.

இனி, உலகம் மாயையினின்று தோன்றித் தானே யொடுங்குமென்பாரை மறுப்பான், 'உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்' என்றார். இதனால், சங்காரமென்று இவ்வதிகாணத்துட் கூறியது சங்காரக் கடவுளை யென்பது தெளிவு. சடப்பொருள் அசைப் போனை யின்றி அசைவுபடாது. காந்தம் இரும்பை இழுக்குமெனின், இரும்பையுங் காந்தத்தையும் அருகு வைப்பா ரில்வழி, காந்தமே சென்று இரும்பை ஈர்ப்பதில்லை. ஈர்த்ததை அறிவுடைப் பொருள்போல விட்டுவிடுவதில்லை. சடசத்தி யென்பதுண்டு. அது அறிவுடைய ஒரு முதலினாலேயே இயங்கும்.

உயிர்களாலேயே சடப்பொருள் இயங்குதலின், உயிர்களே சடப்பொருளியக்கத்திற்குப் போதுமெனின், தம் வயமில்லாத உயிர்கள் பெரிய ஞாலத்தைத் தோற்றுவித்து ஒடுக்க வல்லன அல்ல. பந்தமற்ற உயிர்கள் அங்ஙனஞ் செய்யுமெனின், அவை அநாதியே பந்த மற்றனவா ? இடையிலே பந்தம் அற்றனவா என்ற கேள்வி யெழும். அவை அநாதியே பந்தமில்லாதனவென்னில், அவை பலவா மாத

வின், பன்மைக் கருத்து வேற்றுமை யுணர்த்தும். வேற்றுமையுடைய உயிர்கள் பல இருப்பவே தொழில் ஒழுங்குபட நிகழ்தற்கு அவருள் ஒருவன் தலைவனாதல் வேண்டும். அவனே கடவுளாதலின், அவனாலேயே உலகந் தோன்றியொடுங்குமென்பது முடியும்.

இடையிலே பந்த மற்ற உயிர்கள் உலகை நடத்துமெனின், அவர்களுடைய பந்தத்தை நீக்கிய ஒரு முதல்வன் இருத்தல்வேண்டும். அவனே கடவுள் என்பது முடியும்.

சடமாய உலகம், மாயையிலொடுங்கித் தோன்றுதலின், மாயை உலகிற்கு வித்துப்போல்வது. அம்மாயை அசேதனமாதலின், அதற்கு ஆதாரமாய இறைவனது சத்தியினாலே அது தொழிற்படும். நிலத்தின் தட்பவெப்பத்திற் கேற்றவாறே வித்து முளைத்து வரும். மாயையாகிய வித்திற்கு இறைவன் ஆற்றல் நிலம்போல் ஆதாரவாயுள்ளது. மாயை தொழிற்படுதல், உயிர்கள் உடம்பெடுத்தியங்குதற்பொருட் டென்பது தெளிவு. உயிர்களையெல்லாம் ஒப்பநோக்கு முதல்வன் எல்லா உயிர்களுக்கும் ஒரு தன்மையான வாழ்வை நல்கவேண்டும். அவ்வாறின்மை கண்கூடாதலின், அதற்குக் காரணம் உயிர்களின் வினையென்பார், "அவர்வினையால் வேண்டுருவைத்தான் கொடுத்துக் கூட்டானே" என்றார். 'கூட்டானே' என்பது கூட்டுவான் என்னும் பொருளுடையது.

இறைவன் உலகத்தைத் தொழிற்படுத்துங்கால், உருவம் வேண்டுவா னல்லன். உருவந் தோன்றி யழியுந்தன்மையுடையது. உடலை யியக்கு முயிர்க்கு உருவம் வேறு வேண்டாமைபோல, உலகத்தை இயக்கும் இறைவனுக்கு உருவம் வேண்டுவதில்லை. உடலின் பகுதிகள் உயிர்க்குக் கருவிகளாதலால், உயிர் உடலிற் கட்டுண்டு நிற்கும். இறைவன் அத்தகைய கருவிகளின்றியே எண்ணமாத்திரத்தால், ஆக்கியளித்

தழிப்போ ஞுதலின், உலகத்திலே கட்டுப்படாது நிற்போன். இறைவன் உலகத்தை அனுபவியா ஞுதலின், ஒருவன் தான் கண்ட கனவை நனவிலே நினைத்துப் பார்க்குங்கால், அதன் கண் அவன் தொடக்குறுமை போல இறைவன் உலகத்திலே தொடக்குறுன் என்பதே இவ்வதிகரண இறுதிச் செய்யுட் கருத்தாகும். இறைவன் தன்பொருட்டு உருவம் வேண்டா னெனினும், அன்பர்களுக் கருளுதற் பொருட்டு உருவங் கொள்ளுவ னென்பது இந்நூற்கருத்தாகலின், அவன் எஞ் ஞான்றும் உருவங் கொள்ளானென்று கருதுதல் தவறு. இந்த அதிகரணத்தால் உள்ளதே தோன்றி யொடுங்கி மீளத் தோன்றும்; அதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மை யின், அதனைத் தோற்றவும் ஒடுக்கவும் ஒரு முதல்வன் உளன். ஒடுக்கினவனே தோற்றுவிப்பன் என்னு முண்மை கள் அறியற்பாலன.

இனி, மூன்றும் அதிகரணமாவது சங்காரமே முத லென்பது. ஒடுக்குங் கடவுள் ஒருவனே முதல்வன். ஏனைக் கடவுளர் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்கள். ஆதலின், முழு முதற் கடவுள் ஒருவனே யென்பது கருத்து. உடம்பொடு கூடிய உயிர்கள் சுட்டியுணரப்படுந் தன்மையன. உடம்பில் லாத கடவுள் சுட்டியுணரப்படாதவன். அவனே உடம்பு களை ஒடுக்கி உண்டாக்குதலால், உடம்பிற்பட்ட உயிர்கள் அவன் வயமாய் அடங்கி நிற்பனவே. சுட்டியுணரப்படாத பொருள் பல வாதற்குக் காரணமில்லை. தன்மை ஒன்றுய இடத்துப் பன்மை கோடற்கிடமில்லை. அப்பொருள் உருவு அருவு என்னும் இருவகைப்படும் உலகப் பொருள்களுள் ஒன்றன்று. ஆதலின் அதனை ஆசிரியர் 'ஒன்றலா ஒன்று' என்றுர். உயிர்கள் பலவும், முத்தி நிலையிலும் பரம்பொரு ளினின்று இயற்கையில் வேறு பட்டனவாகலான், அங்கும் அவை அப்பொருட்கு அடிமையாவனவே. சுட்டியுணரப்

படாத பரம்பொருள் பேராற்றலுடைமையின், அஃதொன்றே உலகை ஒடுக்கவுந் தோற்றுவிக்கவும் வல்லதாம். இரண்டாவது மிகையாகும். ஆதலால் முழுமுதற் கடவுள் இருவரென்று கோடற்கிட மின்மை தெளிக.

இவ்வதிகரணத்தால், சுட்டியுணரப்படாதபரம்பொருள் தன்மை வேறுபாடுடையதென்று கொள்ள இட மின்மையாற் பன்மைப்படுமென்பது தவறுதலானும், அளவில்லாத பேராற்றலுடைய அப்பொருளுக்கு எனையன அடிமையாகலானும், அப்பொருள் ஒன்றே முழுமுதலாயுள்ளதென்பது பெறப்படும்.

## இரண்டாஞ் சூத்திரம்

இனி இரண்டாஞ் சூத்திரப் பொருள் ஆயற்பாற்று:—இஃதே மிக விரிவாக எழுதப்பட்டுள்ளது. இச்சூத்திரக் கருத்து வருமாறு:—சங்கார காரணனாகிய முதல்வன் உடலிலே உயிர் கலந்திருப்பது போல உயிர்களிற் கலந்து அவையேயாயும் பொருட்டன்மையால், அவற்றின் வேறாகியும், கண்ணும் உயிரினறிவும் ஒரு பொருளை ஒருங்கு காணுதல் போல, உயிரோடு உடன் அறிதல் பற்றி உயிருக்குயிராயிருப்பதால், உடனாயும் இருக்கிறான். அப்படி நின்று, உயிர்கள் இருவினையினாலே இறப்பும் பிறப்பும் புரியும்படி, அவ்விருவினைகளைச் செலுத்துவதாகிய ஆணை யென்னுந் தனது அறிவாற்றலோடு (சிற் சத்தியோடு) பிரிவின்றி விளங்குவன். இச்சூத்திரத்துள் முதல்வனது பொது இலக்கணங் கூறுமுகத்தானே, அவனது சத்தியும், வினையும், மாயையுமுண்மை குறிக்கப்பட்டது. சத்தி, அவனுக்குக் குணமும், மாயை உடைமையுமாம். இருவினை கூறவே, அவற்றிற்குப் பற்றுக்கோடாய மாயையுங் கூறியவாறாயிற்று. சத்தி, இறைவனுக்கு மூலமாகிய துணைக்காரணம். இருவினை அவன் சத்தி

வழி நிற்பதாகிய இடையாய துணைக்காரணம். மாயை, முதற் காரணம், இறைவன் நிமித்த காரணம்.

தோற்றமும் ஒடுக்கமும் வினையினுல் உளவாம். எனவே, தோன்றியது ஒடுங்கும் வரை நிற்கும் நிலையும் அதனுலே உள்ளதே. மறைப்பென்பது உயிர்கள் வினைப்பயனை நுகருங் கால், அவ்வினை வழி நின்று, ஆணவமலம் நீங்குதற்குரிய பருவம் வரும் வரை, உயிர்களை நடத்துவதாகிய முதல்வனது திருக்குறிப்பே. மறைப்பு நிகழாவிடின், மலபரிபாகம் வந்து, உயிர்கள் பாசநீக்கம் அடையமாட்டா. மறைப்பு, காத்தலின் கண் அடங்கும். அருளல் என்பது வீடு பேறளித்தல். அது மீட்சியின்றி இறைவன் பால் ஒடுங்குவதே யாகலான், அது ஒடுக்கத்தி லடங்கும். இங்ஙனம், படைப்பு, காப்பு, ஒடுக்கம், மறைப்பு, அருளல் என்ற ஐந்தொழிலும், முத்தொழிலின் கண் அடங்குதல் காண்க. இத்தொழில்கள், பந்தமும் வீடுந் தருதல் என்னு மிரண்டின் கண் அடங்குதலின், இறை தொழில்கள் இரண்டென்பது முண்டு.

ஐந்தொழில், தூலம், சூக்குமம், அதிசூக்குமம், (வெளி நுட்பம், மிகுநுட்பம்) என முத்திறப்படும். தூலம்-வெளிப் படை. சூக்குமம், உலகம் ஒடுங்கியபின், மீண்டும் தூல ஐந் தொழில் நடப்பதற்கு முற்படியாக உயிர்கள் ஆணவ மலத் தோடு மாத்திரமுள்ள தனி நிலையில் (கேவலத்தில்) நிகழ் வன. அதிசூக்குமமென்பது ஒவ்வொரு பொருளையும் உயிர் நுகருமிடத்தே நிகழ்வது இவை விரிப்பிற் பெருகும்.

இனி, இரண்டாஞ் சூத்திரம் முதலதிகரணத்திலே இறைவன் உயிர்களோடு இரண்டறக் கலந்து நிற்பது கூறப் படுகின்றது. அதனையே அத்துவிதக் கலப்பென்பார் வட நூலார். அத்துவிதமென்ற சொல்லைப்பற்றியே, வைதிக சமயத்தாருட் கருத்து வேறுபாடு பெரிதும் விளைந்திருப்ப தால், அதன் உண்மைப் பொருளைப் பரமாசாரியர் இவ்வதி

காரணத்திலே தெளிவாக விளக்கி யருளினார். கடவுள் ஐந்தொழிலியற்றுவது உயிர்கள் பொருட்டெனின், கடவுளுக்கு முயிர்க்குமுள்ள சம்பந்தமாவது யாது? என்ற வினாவெழுகின்றது. கடவுள் உயிர்க்கு வேறாகவே நிற்பாரெனின் உயிர்க்கும் அவருக்கும் சம்பந்தமில்லையென்பது போதரும். அங்ஙனமாயின் இறைவன் உயிர்களை இயக்குதல் கூடாது. கடவுள் உயிர்களை யாமெனின், அவர் ஐந்தொழில் செய்வது தம் பொருட்டென்பது முடியும். அது அவரது முழுமுதற் றன்மைக்கு மாறாகும். கடவுள் உயிரோடு கலந்து நிற்பதினாலேயே, ஐந்தொழில் நிகழ்த்துவதற்கு இயைபு ஏற்படுகின்றது. எப்படி உயிரானது உடம்பொடு கலந்து நின்று அதனை நடத்துகின்றதோ, அப்படியே அறிவுப்பொருளாய இறைவன் உயிரறிவிற் கலந்து நின்று ஐந்தொழி லியற்றுகின்றா னென்பதே பரமாசாரியர் கருத்து. உயிருக்கும் உடலுக்கு முள்ள சம்பந்தத்தையும், கண்ணொளிக்கும் கதிரவொளிக்குமுள்ள சம்பந்தத்தையும், இரண்டற்ற கலப்பு அல்லது அத்துவிதமென்று கூறுதல் சாத்திர மரபு. “பிரமம் அத்துவிதம்” என்று உபநிடதங் கூறுகின்றது. அத்துவிதம் என்ற சொல் இரண்டின்மையைக் குறிக்கும். குறிக்கவே, அது ஒன்றென்று பொருள்படு மாதலின் கடவுள் உலகத்தோ டத்துவிதமாயிருக்கின்றா ரெனின், கடவுள் உலகமேயா யிருக்கின்றார்; கடவுளும், உலகமு மொன்றே என்பது கருத்து என்று ஏகான்ம வாதியர், தம்மதம் நாட்டுவர். அதனை ஆசிரியர்மெய்கண்டார் மறுத்து, “அத்துவிதமென்ற சொல்லானே” ஏகம் என்னில், ஏகமென்று சுட்டுவ துண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந்நிய நாத்தியை (நாஸ்தி) யுணர்த்துமாயிற்று ” என்றார். (அந்நிய நாத்தி=அந்நியமின்மை) ஒன்றென்ற சொல்லிருக்கும்போது, இரண்டற்ற என்றசொல்லினால் அதன் பொருளைக் குறிக்கவேண்டியதில்லை. ஆதலால்

பிந்தியசொல் வேறன்மையாகிய கலப்பினைக் குறிக்குமே யொழியப் பொருள் ஒன்றே என்பதைக் குறியாது. ஒன்று என்று சுட்டுகிற பிறிதொன்று இருப்பதால் பொருள் ஒன்றே என்றல் தவறென்பது ஆசிரியர் கருத்து. ஆனால் "'பிரமம் ஏகம்' பிரமப் பொருளில்லை யாயின் ஒருபொருளு மில்லை" என்று சொல்லும் வாக்கியங்களால் ஏகான்ம வாதம் பெறப்படாதோ வென்னில், கடவுள் ஒருவனே உளன். இரு கடவுளர் இலர் என்பதும் கடவுளுடைய சார்பில்லாது ஒரு பொருளும் வடிவெடுப்பதுந் தொழிற்படுவது மில்லை யென் பதுமே அவ்வாக்கியங்களின் கருத்தாமன்றிக் கடவுள் ஒரு வரே உளர்; வேறு யாதுமில்லை என்பது அவற்றின் கருத் தென்பதைப் பரமாசாரியர் இனிது விளக்கினர். அகரத்தின் உதவி கொண்டு பிற எழுத்துக்கள் ஒலிப்பது போலக் கடவு ளின் சார்பு பற்றியே உயிர்களியங்குமென்றனர். உயிரறிவு கண்ணொளியோடு கலந்து பொருள்களைக் காணுகின்றது. உயி ரறிவுங் காண்கின்றது. கண்ணுங் காண்கின்றது. ஒன்று அறி வாற்றல், மற்றொன்று சடசத்தி ஆதலால் இரண்டும் ஒரு செயல் நிகழ்த்துவதாகக் கூறுமிடத்து 'உடன்' என்ற சொல் வழங்குவதே பொருத்தமாம். இறைவன் உயிர்க்குப் பொருள் களைக் காட்டுமிடத்துத்தானும் அவற்றைக்கண்டு காட்டுகின் றான். ஆதலின் அவன் உயிர்களோடுடனுயிருந்தறிவன் என் றார். எனவே 'உலகெலாம் ஆகி, வேறாய், உடனுமாய்' என்ற வாறு இறைவன் மூவகையாய் நிற்கின்றானென்பது போத ரும். இங்ஙனம் கடவுளுக்கு முயிர்க்குமுள்ள சம்பந்தத்தை எடுத்துக் கூறுஞ் சமய நூல் சித்தாந்த சைவமே யன்றிப் பிற எச்சமய நூலுமில்லை. சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழ கத் தலைவராய திருவாளர் நெல்லையப்ப பிள்ளையவர்கள் ஒன் றாய், வேறாய், உடனாய் என்பதற்கு இறைவனது விழைவு அறிவு செயல்கள், உயிரின் விழைவு, அறிவு செயல்

களோடு கலந்திருப்பதைக் காட்டுமென்று விளக்கு முகந்தான் ஒரு ஆராய்ச்சியியற்றி யுள்ளார்கள். விழைவென்பது விருப்பத்தைக் காட்டுதலின், அது ஒற்றுமையையும் இறைவனது இயற்கை ஞானம், உயிரின் செயற்கை ஞானத்தின் வேறாதலின் வேற்றுமையையும் இறைவன் உயிர்க்குக் காட்டுவதோடு, தானுங் காண்கின்றானாதலின், உடனிகழ்ச்சியும் புலனாமென்பது அவர்கள் கருத்து. இதனால் சைவ சித்தாந்தமே இறைவனுக்கும் உயிர்க்குமுள்ள அத்துவித இயல்பைத் தக்கவாறு விளக்குமெய்க் கொள்கையுடையதென்று தெளிக. 'ஏகம்' என்ற சொல் ஒரு பொருளையே யுணர்த்தும். 'அத்துவிதம்' என்ற சொல் அந்நியமின்மையை யுணர்த்துமாதலின் ஏகான்ம வாதக் கொள்கைக்கு அத்துவித மென்பது பொருந்தாது. துவித வாதம், கடவுள் எங்கும் நிறைந்து எல்லாவற்றிற்குஞ் சார்பாய அடிப்படையாய் நிற்குந் தன்மையை விளக்குமாறில்லை. அத்துவிதமென்பது கடவுளுக்கும் உயிர்க்குமுள்ள கலப்பையே உணர்த்துதலின், அக்கலப்பினை இனைத்தென்றறிவுறுத்துஞ் சித்தாந்த சமயமே அத்துவிதக் கொள்கையுடையதாமென்று தெளிக. மெய்யியல்பு குறிப்பதற்குச் சுத்த மென்ற அடைமொழியை வழங்குவது வடமொழித்தருக்க நூன்மரபாதலின் சைவசித்தாந்த நூல் கூறும் அத்துவிதமானது சுத்தாத்துவிதமென்னப்படும். பால் பிரை மோரோடுகலந்து தயிரானாற்போலப் பிரமமானது பசு, பாசங்களோடு கலந்து உலகமாயிற்றென்று கூறும் வைணவக்கொள்கை விசிட்டாத்துவித மென்னப்படும். முத்தியிற் சிவனோடு உயிர் கலந்து சிவமாகவே மாறி விடுமென்ற கொள்கை சிவாத்துவிதக் கொள்கையாம். கடவுளுக்கும் உயிர்க்குங்கலப்பின்மை கூறும் மத்துவாசாரியார் கொள்கை துவிதக் கொள்கை யென்னப்படும்.

இரண்டாஞ் சூத்திர முதலதிகரணத்தால் கடவுள் உயிரோடு ஒன்ருயும், வேருயும், உடனுயும் நிற்பன் என்பது இனிது விளக்கப்பட்டது.

இனி இரண்டாஞ் சூத்திரத்தின் இரண்டாமதிகரணப் பொருள் வருமாறு :—ஆன்மாக்களுக்கு இருவினைப் பயன் முதல்வன் ஆணையால் வரும், வினையின் வழி, எல்லாம் நிகழுமாயின், கடவுளின் தொடர்பு வேண்டியதில்லை யென்பாரை மறுத்து இறைவன் கட்டளையின்றி வினைப்பயன் நேர்வதில்லை. அஃதெவ்வாறெனில், அரசன், தன் கீழ்ப்பட்ட ஓர் ஊரிலுள்ளவர்கள் நெறி நின்று வழுவினுல்,அவர்களைத் தண்டித்தற்கு அமைத்த ஏற்பாடு போலவே முதல்வனும் உயிர்களைத் திருத்தியுய்யக் கொள்ளும் பொருட்டு அவைகள் இருவினைப்பயனை நுகர்தற்குரிய இயைபினை யமைத்துள்ளானென்க. உயிர்கள் அந்நெறி திறம்பிய காலை அவைகளுக்கு அவற்றின் செயற் பயனைக் கொடுத்து அவற்றை நன்னெறி நிறுவுதலே இறைவன் திருநோக்கம்.அதனை நிறைவேற்றவே அவனுடைய கட்டளைப்படி இருவினைப் பயன் செய்தவனைச் சென்றடையும் என்றவாறு.

சடமாகிய வினைப்பயன் வினை செய்தானைத் தானே சென்றடைய மாட்டாது. முதல்வனது திருக்குறிப்பின் படியே வினைப்பயன் நுகரப்படுகின்றது. இதனை உதாரணத்தாலுணர்த்துவார், உழவு தொழிலின் பயனை நிலம் விளைவிப்பதுபோல, வினையின் பயனை இறைவன் விளைவிப்பன். வித்து மாத்திரம் நிலத்தின் சார்பின்றிப் பயன் கொடாமைபோல, வினைதானே செய்தவனை யணையாது என்ருர். வினையைச் செய்த உயிர் வினைப்பயனைத் தெரிந்து நுகருமெனின், நல்வினையின் பயனை அது நுகருமேயன்றித் தீவினைப் பயனை அது நுகரவிரும்பாது; இருவினைப் பயனையும் உயிர்கட் களிப்பது இறைவனே.

ஒரு செயலைச் செய்யுங்கால், அது மாயாகாரியமாகின்றது. மனம், சொல், உடம்பு என்ற மூன்றும் மாயாதத்துவச சார்புடையன. ஆதலால் இவற்றைக் கொண்டு செய்யப்படுஞ் செயல்கள், மாயையைப் பற்றுக்கோடாகவுடையன. மாயையிலே செயல் நிகழ்வதற்கேதுவாய உயிரின் செயற்றிறமே அதன் கன்ம மெனப்படும். அறியாமை விளைக்கும் ஆணவம் நெல்லில் உமியும் செம்பிலே களிம்பும்போல உள்ளது. ஆணவமென்பது மலம் என்று சிறப்பாகக் கூறப்படும். மாயை, மலம், கன்மம் என்ற மூன்றும் எப்போது முள்ளன.

ஆணவ மலம் உயிரின் அறிவினை மறைக்கவே, உயிரினிச்சை உலகப் பொருள்களிற் செல்லும். அப்போது ஆணவ மலத்தின் விளைவு ஏற்படுகின்றது. அது மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என எழு வகைப்படும். நாலறிவாலே கெட்டதென் றுணர்ந்த பொருள்களிலே மயல் விளைப்பது மோகம்; விரும்பிய பொருளைப் பெரிதாக மதிப்பது மதம் எனப்படும். ஆசை மென்மேல் மிகுவது அராகம். விரும்பிய பொருளினை இழந்த விடத்துத் துன்புறுவது கவலை. உள்ளம் வெதும்பித் தவிப்பது தாபம். உள்ளமும் உடம்பும் வாடுதற் கேதுவாயது வாட்டம். விசித்திரமென்பது, பெற்றதைப் பாராட்டித் திருத்தி யடைதற் கேதுவாயது. வினையின் விளைவு இன்ப துன்பங்கள்; மாயையின் காரியம் உள்ளம் உடப்பு முதலிய கருவிகள்.

இருவினை யென்பதில்லையாயின் உயிர்களுக்கு வெவ்வேறு வகைப்பட்ட இன்ப துன்ப முதலியவற்றைக் கூட்டுதல், எல்லா வுயிர்களையும் ஒப்ப நோக்கும் பெருங்கருணையுடைய இறைவனுக் கேலாதென்பதறிக. பிறர்க்குந்தமக்குந் தீங்கு செய்தல் தீவினை, பிறர்க்குந் தமக்கும் நன்மை செய்தல் நல்வினை; இவ்விரண்டுஞ் செய்தவிடத்து, அவை மிக நுட்பமாய்ப் புத்தி தத்துவத்திற் பதிவுற்ற காலை பாவ புண்

ணியமெனப்படும். அவைசஞ்சிதமென்ப. வித்தினைச்சேர்த்து வைத்த களஞ்சியம்போலச் சஞ்சிதக்கன்மத்தொகுதி புத்தி தத்துவ வாயிலாக மாயையிற் கிடப்பது. சூக்கும தூலமாகிய செயல்கள் ஆகாமிய மெனப்படும். இன்ப துன்பத்திற்கேது வாய் வருங்கால் வினை பிராரத்த மெனப்படும். வினை விளைவிற் காதாரமானது மாயை யாதலின், அதனைப்பற்றி ஆராய்வாம். காணப்படுகின்ற உலகத்தை அறிவுடையது, அறிவில்லாதது என இரண்டாகப் பகுக்குமிடத்து, அறிவிலாப் பொருட் டொகுதியனைத்தும் சடமென்ற பெயராற் குறிக்கப்படும். சடப்பொருள்களின் தன்மையை ஆய்ந்தோர் அவை ஐம் பூதங்களாலாயவை யென்பர். ஐம்பூதங்களும் அற்றின் நுட்பமாகிய மாபூதங்க ளெனப்படும் தன் மாத்திரைகளி னின்று வந்தன. மனமும் ஐம்பொறிகளும் அவ்வாறே அகங்காரத்தினின்று வந்தன. அகங்காரம், குணத்தினின்று வந்தது. குணம் பிரகிருதி தத்துவத்தினின்றும் வந்த தென யோகக்காட்சி வல்ல அறிஞர் கண்டு, பிறர்க்கு அறி வுறுத்தினர். பல்வகைப்பட்ட பொருள்களெல்லாம் ஒடுங் குங்கால் ஒரு தன்மையன வாகின்றன. மண்ணிற்செய்த பல் வகைப் பாத்திரங்களெல்லாம் உடைபட்டகாலை மண்ணாதல் போல, ஒருபொருளை ஆயுங்கால் ஐம்பூதமும் அதிற் கலந்தி ருப்பதாகத் தெரிவதால், அது உடைபட்டு அழியுங்காலை அது ஐம்பூதங்களிலு மொடுங்கும். சடப்பொருள்கள் உரு விழந்து ஒடுங்கும் அடிப்படை, தத்துவ மெனப்படும். பூத தத்துவத்தை ஒன்றென்னாது ஐம்பூதமெனப் பகுத்தது, ஐவகைத்தாய் வேற்றுமைப்பட்ட தன்மை காணப்படுதல் பற்றி யென்க. மூலப்பிரகிருதிவரை, சடவுலகை நுட்பமாகப் பகுத்தறிய இயலாதவர்கள் ஐம்பூதங்களின் நுட்பமாகிய அணுக்களே சடவுலகிற்காதி யென்றும், தன்மாத்திரைகளே ஆதியென்றும், மனமேயாதியென்றும் தாம் அறிந்த அள

விற்கூறுவர். கடவுள் எல்லாவற்றையும் சூனியத்தி லிருந்து படைத்தாரென்பார் சூனிய முதற்காரணவாதி யெனப்படு வர். சூனியத்திலிருந்து ஒன்றுந் தோன்றாது என்ற கருத் தைப் பரமாசாரியர் 'இல்லதிற்குத் தோற்றமின்மையின்' என்றவிடத்தே தெளிவுபடுத்தினர். இதனால்ஒன்றுஞ் சூனிய மாவதில்லை யென்பதும் போதரும்.

இனி, சடவுலகிற்கு மூலம் பிரகிருதியே யென்ற சாங்கியர் கொள்கையை, வைதிக சமயத்தாராய ஏகான்ம வாதியரும் தந்திரசமயத்தாராய பாஞ்சராத்திரிகர், மாத் துவர் முதலியோரும் மேற்கொண்டனர். மூலப் பிரகிருதியி னும் நுட்பமான தத்துவங்கள் உள்ளன. மூலப்பகுதி யென் பது கலையென்னுந் தத்துவத்தினின்று வந்தது. அது மாயை யினின்று வந்தது. மாயையே அதற்குக் கீழுள்ள தத்துவங் கட்கு அடிப்படை. மாயை = மாயா = மாய் + ஆ = மறைதல், ஆதல். மாயை யென்ற சொல்லிற்கு எல்லாம் ஒடுங்குதற் கும், மீள உளதாதற்கும் அடிப்படை யென்ற பொருளிருத் தலால், பிறசமயத்தார் மூலப்பிரகிருதியே மாயை யென்பர். கலை தோன்றுதற்கேதுவாய மாயையினின்றே காலம், நியதி என்ற தத்துவங்கள் தோன்றின. காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவமுங் கூடிய உயிர் புருடதத்துவ மெனப்படும். புருடதத்துவமென்பது ஓர் சட தத்துவமன்று. இனி, மாயைக்கு மேற்பட்ட ஐந்துதத்துவங் கள் சுத்தமாயை என்பதின் பகுதிகளாக அமைந்துள்ளன. அவைகளின் தொடர்பால், ஆன்மா, மயக்கமுந் துன்பமு மடைவதில்லை. மாயையின் தொடர்பால் மயக்க மேற்படுத லால் அதனை அசுத்தமாயை என்று வழங்குவது சைவசித் தாந்த நான்மரபு. மூலப்பிரகிருதியைப் பிரகிருதி மாயை யென்ப. எனவே, மாயை என்பது, சுத்தமாயை, அசுத்த மாயை, பிரகிருதிமாயை என மூத்திறப்படும். இவை யொவ்

வொன்றிற்கும் பலபெயர்கள்உள்ளன. இவற்றிலுள்ள தத்துவங்கள் முப்பத்தாறு. இவற்றின் உண்மைகளையும் தன்மைகளையும் ஆசிரியர் சிவஞான முனிவர், பாடியத்துள் இனிது விளக்கினமைபோலப் பிற எவ்வாசிரியரும் விளக்கவில்லை.

ஈண்டு மிகச் சுருக்கமாகவே தத்துவங்களின் தன்மையைக் குறிக்கின்றும்.

இறைவன் தூய உடம்பையுடைய உயிர்கள்பொருட்டுத் தானே ஐந்தொழில் செய்வன். அத்தொழில் இயற்ற வாயிலாகப் பயன்படுமிடம் சுத்தமாயா தத்துவங்கள். பிறஉயிர்கள் பொருட்டு அவன் காரணேசுரர் வாயிலாக ஐந்தொழில்நிகழ்ச்சியை நடாத்துங்கால், அவர்களுக்கு மயக்கமிலதாய உடம்பு வேண்டப்படும். அவ்வுடம்பு தூயமாயையா லாயது. என்று தெளிக. ஆதலாற் சுத்தமாயை உண்மைக்குக் காரணம் அறியற்பாற்று. மேலும் உயிர்களுக்குப் பெயர், இனம் முதலியவற்றை அறிதற்கேதுவாய சிறப்புணர்ச்சி எழுத்தோசையாலாகிய சொல்லால் நிகழ்வது.அவ்வெழுத் தோசைக்குமுதற் காரணம் சுத்தமாயையே. ஆகாயத்திலெழும் இசை யோசை எழுத்தோசையைப் புலப்படுத்தும். எழுத் தோசைக்கும் இசையோசைக்கும் வேற்றுமை அறியற்பாலது. பெயர், இனம், தொழில் முதலியவற்றை உயிர் குறித்தற் கேதுவாய உயிரினறிவை விளக்குவதாய் உள்ளது எழுத்தோசை; இசை யோசை பொருட் சிறப்பில்லாது வானில் எழுவது என அறிக.

மேற்கூறிய சிறப்புணர்ச்சி புத்திதத்துவ புவனங்களிலும், அதற்குமேலுள்ள புவனங்களிலு மிருப்பார்க்குண்மையின், அதற்குக் காரணமானது, சுத்தமாயை யென்பதே துணியப்படும். இவ்வெழுத் தோசை, சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி (மூலம், பிண்டம், இடை, விரி) யென நான்கு வகைப்படும். கடையில் நின்ற வைகரி, தன்

செவி கேட்பது, பிறர் செவி கேட்பதென இருவகைப்படும். ஆகவே, வாக்கு ஐவகை யென்பது முண்டு. சுத்த மாயை நின்று சுத்தமாகிய பொருளுலகமும் உரை யுலகமுந் தோன்றுவன. உரையுலகம், பொருளுலகத்தைப்பற்றி நிற்பது. பொருளுலகமென்பது கலையுந் தத்துவமுமாம். சுத்த மாயையிற்றோன்றிய ஐந்து கலைகள் எல்லாத் தத்துவங்களிலும் வியாபித்து அவற்றிற்கு மேற்பட்டு நிற்பன. அவை நீக்கம், பதிவு, புலம், அமைதி, அமைதி மேல், (நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதை) என்பன. ஐவகைப் பட்ட வாக்கானது ஐங்கலைகளின் வாயிலாக, எல்லாத் தத்துவங்களினுஞ் சென்றியையும். ஐவகை வாக்குக்களுள், சூக்குமையானது சிவ தத்துவத்தைப்பற்றி நின்று மகா சங்கார காலம்வரை அழியாதிருப்பதால், அதனையே சத்தப் பிரமமென்பர் சத்தப் பிரமவாதிகள். மேற்கூறிய எழுத்தோசை, வானில் தோன்றும் இசையோசையால், நமது செவிக்குப் புலனாமென்பது முன்னே கூறப்பட்டது.

இனி, தத்துவங்களின் தோற்ற முதலியவற்றை ஆய்வாம். **சிவ தத்துவம்** :—(சிவ முதல்) எல்லாம் ஒடுங்கிய பின், மீள அவற்றைத் தோற்றுவிக்கக் கருதிய முதல்வன், சுத்த மாயையைத் தனது அறிவாற்றலால் நோக்குவன். அதனாற் றிரிவுற்ற சுத்தமாயையின் பகுதி சிவ தத்துவமெனப்படும். சூக்குமை வாக்கு அதனைப்பற்றி நிற்பதென்பது, முற்கூறப்பட்டது.

**சத்தி தத்துவம்** :—இறைவனது செயலாற்றல் சார்ந்த போது தோன்றுஞ் சுத்தமாயைப் பகுதி சத்தி தத்துவமெனப்படும். அது பைசந்தி வாக்குக்குப் பற்றுக்கோடாக வுள்ளது. சிவ தத்துவவிரிவு நாத தத்துவமெனவும், சத்திதத்துவ விரிவு விந்து தத்துவமெனவுங் கூறப்படும். சிவம், சத்தி, நாதம், விந்து (சிவம், அருள், ஒலி,

வித்து) என்ற நான்கும் இறைவனது அருவ வடிவமெனப் படும். அருவம் - தோன்றா நிலை.

இறைவனது அறிவாற்றலுஞ் செயலாற்றலும் ஒத்துச் சிறப்பாக உன்னும் இடம், சதாசிவ தத்துவமெனப்படும். அது உலகங்கள் தோன்றுவதற்கு அடிப்படையான பாது காப்பு நிலை என்னப்படும். அது இறைவனது அருவுருவ வடிவமெனப்படும். அது மந்திமை வாக்கிற்குச் சார்பாயுள் ளது. இத்தத்துவம், தமிழிலே அருட்சிவமெனப்படும்.

இனி, உலகந் தோன்றுவதற்கேதுவாய இறைவனது செயற்றிறம் சிறப்பாகப் பதிவுற்ற சுத்தமாயைப் பகுதி ஈசுர தத்துவமெனப்படும். அதன் மூலமாய், இறைவனது அறி வாற்றல் சிறந்து விளங்கிக் கீழ்த் தத்துவங்களிலுள்ள உயிர் கட்கு உணர்வைப் புலப்படுத்துதற் கேதுவாய வைகரிக்குச் சார்பாய் வடிவெடுத்த தூய மாயைப் பகுதி, சுத்தவித்தை யெனப்படும். ஈசுரமுஞ் சுத்த வித்தையும் இறைவனது உருவத் திருமேனிக்குரிய இடங்களாம். இவற்றில், இறைவனிலை அதிகார மெனப்படும். இவற்றை ஆட்சி, தூயபுலம் என்ற பெயரா லழைத்தல்கூடும். அதிகாரமென் பது,உள்ளது சிறத்தலைக் குறித்தலின்,‘ Evolution,’‘Deve-lopment’ என்ற சொற்களிற் போந்த கருத்துக்களை இனிது விளக்குவதாகும்.

சுத்த தத்துவங்களிலே ஐந்தொழிலும் இறைவனாலேயே நடைபெறுகின்றன. கீழுள்ள தத்துவங்களிலே ஐந்தொழில் இறைவனால் அதிட்டிக்கப்பட்ட கடவுளால் நிகழ்கின்றது. அவர்களை இயக்குங் காரணேசுரர் சுத்த தத்துவங்களிலுள்ள வர்கள். அவர்கள் இறைவனாலியக்கப்படுபவர்கள். சுத்த வித்தியாதத்துவத்திலே உள்ள அயன், அரி, அரன் என்னு மூவருளர். அவர்கள் கீழுள்ள அண்டங்களிலுள்ள, அயன், அரி, காலருத்திரர் என்னு முத்தொழிற்றலைவரை யியக்கு

துயரென்பன உளவாம். அவற்றை வடநூலார் பஞ்சக்கிலே சம் என்ப.

மூக்குணங்களும், மயில் முட்டையிற் பன்னிறங்கள் மறைந்து நிற்றல்போல விளங்காது நின்ற தத்துவமே மூலப்பகுதி யெனப்படும். அவை சமமாய் விளங்கி நின்ற தத்துவம் குணதத்துவ மெனப்படும். பிரகிருதி தத்துவ புவனங்கள் குணதத்துவ முடிவிலுள்ளன. குணமூன்றும், சுகதுக்க மோகங்கட் கேதுவாயுள்ளன. சாத்துவிகருணமிகுந் தும், பிற இரண்டுங் குறைந்தும் உள்ள தத்துவம், புத்தி யெனப்படும். இராசதமிக்கு ஏனையன குறைந்த இடத்தே ஆங்கார தத்துவந் தோன்றும். உயிரின் அறிவாற்றலைச் சிறப்பாக விளக்கிப் பொருட் பன்மையைத் துணிதற்குக் கருவியாயும், துணிந்த பொருள்வடிவாய்த் தோன்றும் அறிவாய்நின்று, உயிர்களுக்கு இன்பதுன்ப வுணர்ச்சி நிகழ்தற் கேதுவாயும், இருவினைக்குச் சிறப்பான பற்றுக்கோடாயும், அவற்றின் விரிவிற்கெல்லாம் இடமாயுமுள்ளது புத்தி தத்துவமே.

ஆங்காரமானது யான் இது செய்வலென்று துணிந்தெழுதற் கேதுவாயுள்ளது. புத்திக்கும் ஆங்காரத்திற்குமுள்ள வேறுபாட்டைப் பாடியகாரர் தெளிவாக விளக்கியுள்ளார். புத்தியின் தொழிற்பாடாகிய துணிபு, விடயத்தின்கண்ணதாய், இதுகுடம், இஃதாடையெனப் பொருடோறும் வேறுவேறாய், இஃதென்னும் வடிவிற்றாய் நிற்பது. ஆங்காரத்தின் தொழிற்பாடாகிய துணிபு, புருடன்கண்ணதாய், விடயந்தோறும் யான் நிச்சயிப்பேனென ஒன்றாய், யானென்னும் வடிவிற்றாய் நிற்பது என்றமை காண்க. ஆங்காரத்திலே சாத்துவிக மிகுந்த பகுதியினின்று, மனமும் ஐம்பொறிகளுந் தோன்றும். இராசதப் பகுதியினின்று, வினைப்பொறியாகிய கன்மேந்திரிய மைந்துந்தோன்றும். தாமதப் பகுதியி

னின்று தன்மாத்திரையுந் தன்மாத்திரையினின்று ஐம்பூதங் களும் தோன்றும். ஐம்பூதங்கள் ஒன்றினொன்று தோன்று மென்பதற்குக் காரணம், ஒருபூதத்தோடு பிறிதொரு பூதத்தி னுட்பம் விரவிநின்றமை பற்றியே யென்றறிக. ஆகாயத்தி னோடு வாயுபூதத்திற் கேதுவாய பரிச தன்மாத்திரை விரவி நின்றமையின், ஆகாயத்தினின்று வாயுபூதம் வந்ததென்னும் வழக்கேற்பட்டது. அது சேற்றிலே தன் கிழங்கினின்றும் முளைத்த தாமரையைச் சேற்றினின்று முளைத்ததாகக் கூறு வதுபோலும்; வடமொழியிலே 'பங்கஜம்' என்பதற்குச் சேற் றிலே முளைத்ததென்பதே நேர்பொருள். இவ்வாறே, கடவு ளின் திருவருட் சத்தியை ஆதாரமாகக் கொண்ட மாயை யினின்று தோன்றிய உலகைக் கடவுளினின்று தோன் றியதாகக் கூறுவதுமா மென்றுணர்க.

மனமானது, பொது அறிவுக்குப் புலப்பட்ட பொரு ளின்கண் ஆராய்ச்சி நிகழ்தற்கேதுவாயது. முன் அதனை யறிந்த நினைவால், இது இன்னதாமென நினைக்கும் நினைவு, சித்தமெனப்படும். இதுவோ, அதுவோ என்ற ஐயப்பாடு ஏற்படுதற்குக் காரணமாயுள்ளது மனம் எனப்படும். சித்த மும், மனத்தின் விருத்தியாதலின், அதனை வேறு தத்துவ மாக வைத்தெண்ணுவதில்லை.

மனமுதலிய அந்தக் கரணங்களின் தொழிற்பாட்டினை ஆசிரியர் சிவஞான முனிவர் தெள்ளிதின் விளக்கியுள்ளார். உயிரானது வித்தை யென்னுந் தத்துவத்தைக் கருவியாகக் கொண்டு, ஐம்பொறிகளோடு தொடர்புற்ற காலை, எதிரே தோன்றுவ தொன்றின்கண், பொது வகையாக இஃதோர் பொருளென்றறிதலாகிய நிருவிகற்பக் காட்சி நிகழும். பின் னர், உயிரானது மனத்தைப்பற்ற, இது யாதாகற்பாற் றென்ற ஆராய்ச்சி நிகழும். சித்தமானது முன்வாதனைபற்றி, இது இன்னதென்ற கருத்தையும், மனம், இது இன்ன

தாமோ வென்ற ஐயப்பாட்டையும் தோற்றுவிக்கும். பின்னர் உயிர் ஆங்காரத்தைப்பற்றி இது இன்னதென்று துணிவேனென்ற உணர்ச்சியை விளைக்கும். உயிர் புத்தியைப்பற்ற, புத்தியானது அது இன்ன பொருளேயாமென்ற துணிவை உண்டாக்கும். இங்ஙனந் துணிந்த அறிவே சவிகற்பக் காட்சியாம். ஆங்காரம் பிராணவாயுவை யியக்கும். பிறதத்துவ ஆராய்ச்சியுடன் இரண்டாஞ் சூத்திர இரண்டாம் அதிகரணப் பாடிய முடிகின்றது.

இனி, இரண்டாஞ் சூத்திர மூன்றும் அதிகரணப் பொருள் வருமாறு:—முதல்வன் ஆணைப்படி இருவினைப் பயனை நுகர்தற்குரிய உயிர்கள் இறந்து பிறந்து அலமரும். ஒடுங்கினது தோன்றுமென்பது பற்றி, இறந்த உயிர்கள் மீளப் பிறக்குமென்று கோடல் பொருத்தமே. பரு உடம்பு கெட்டபோதும், நுண்ணுடம்பு கெடுதலில்லை. நுண்ணுடம்புடன் சென்று, உயிர்கள் பூத சாரமான உடம்புகளையெடுத்து மேலுலகத்திலோ, கீழுலகத்திலோ தங்கும். நுண்ணுடம்பே எடுக்கப்படும் பருவுடம்பிற்கு மூலமாயுள்ளது. நுண்ணுடம்பானது தன் மாத்திரையாலாயது. தன் மாத்திரை பூத நுட்பமாகலின், பூதத்தாலாய தூல உடம்பிற்கு முதற் காரணமாகின்றது. பொன்னானது எவ்வாறு பல்வகைப் பணிகளாகச் செய்யப்படுதல் கூடுமோ, அவ்வாறே நுண்ணுடம்பானது பல்வகைத் தூல வுடம்புகட்கு மேதுவாம். நனவிற் கண்டவற்றைக் கனவிலே மறந்து விடுதல் போல, ஒரு பிறவியிலறிந்தவற்றை மற்றொரு பிறவியிலே மறத்தல் ஏற்படுதலின், அதுபற்றி மறு பிறவி யின்றெனக் கோடல் தவறு. முன்னுடம்பு இறக்கும்போது, மனம் எதன்கண் பற்றியதோ, அதன்கண் மீளப்பிறத்தலே நேரும். “மனம் தள்ள உயிர் கருவில் வீழும்” என்று மறுபிறவியினியல்பும் ஏதுவும் உரைத்தார். மீண்டு பிறக்க நேருங்

காலை, வேறுலகங்களிலெடுத்த உடம்புகளை விட்டு, நுண்ணுடம்போடு உயிர் கருவிற்பற்றும். உடம்போடு கூடிய உயிர்போக்கு வரவு செய்தற்கிடமாகிய அண்டங்களினியல்பையும் புவனங்களி னியல்பையும், முனிவர் இவ்வதிகரணத்தே விளக்கினர்.

முப்பத்தாறு தத்துவங்களும் ஐந்து கலைகளுக்குள் அடங்கி நிற்பனவென்பது முன்னமே கூறப்பட்டது. தத்துவங்களிலே அண்டங்களுள்ளன. பிருதுவி தத்துவத்தை முனிவர் புடவி தத்துவமென்பர். புடவிதத்துவம், அப்பு தத்துவம், தேயுதத்துவம், வாயுதத்துவம், ஆகாயதத்துவம், ஆங்காரதத்துவம், புத்திதத்துவம், பிரகிருதி தத்துவம், என்னும் எட்டினும் அண்டங்களுள்ளன. இவை யனைத்தும் பிரகிருதிமாயையா லாயவை. பிரகிருதிக்குமேல், அராகம், வித்தை, கலை, அசுத்தமாயை, சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி யென்னும் எட்டுத் தத்துவங்களிலே அண்டங்களுள்ளனவாம்.

புடவி தத்துவத்திலே ஆயிரங்கோடி அண்டங்கள், ஒரு தட்டிலே விளாங்கனி பரப்பினாற் போலுள்ளன. (ஒவ்வொரு அண்டத்தினுள்ளே ஆறு புவனங்களும், புறத்தே நூற்றிரண்டு புவனங்களு முக்கியமானவை.) புடவிதத்துவ அண்டத்திலும், மேலுள்ள தத்துவ அண்டங்கள் பதின்மடங்கு ஏற்றமான அளவின. பிரகிருதி மாயையிலுள்ள அண்டங்களினும் அசுத்த மாயையிலுள்ள அண்டங்கள் நூறு மடங்கு பெரியன. சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம் முதலிய தத்துவங்களிலுள்ள அண்டங்கள் கீழ்த் தத்துவங்களிலுள்ள அண்டங்களினும் ஆயிரமடங்கு பெரியன. சத்திசிவதத்துவ அண்டங்கள் நூறாயிரமடங்கு பெரியன.

புவனங்கள் என்பது அண்டங்களிலே உருத்திர மூர்த்தி முதலிய அதிபதிகட்கு உட்பட்ட சிறப்பிடங்களாம். நிவிர்

த்தி கலையிலுள்ள முதற்றத்துவ அண்டங்கள் ஒவ்வொன்றிலும் நூற்றெட்டுப் புவனங்களும், பிரதிட்டாகலை யிலடங்கிய இருபத்துமூன்று தத்துவ அண்டங்களை யடுத்து ஐம்பத்தாறு புவனங்களும், வித்தியாகலையிலடங்கிய அசுத்தமாயா தத்துவங்களிலே இருபத்தேழு புவனங்களும், சுத்தமாயா தத்துவங்களிலே சாந்திகலை, சாந்தியாதீதகலையிலடங்கிய முப்பத்துமூன்று புவனங்களும் உள்ளன.

புடவிதத்துவ அண்டத்திலே, கீழே காலாக்கினி யுருத்திர புவனமும், அப்புவனத்திற்குமேல் நரகங்களுமுள்ளன. அவற்றிற் கதிபதியாகக் கூசுமாண்டர் வைகும் புவனம் அதற்கு மேலுள்ளது. அதற்குமேல் எழு பாதாளங்களும், அவற்றிற்குமேல், அவற்றிற் கதிபதியாகிய ஆடகேசுரர் வைகும் புவனமுமுள்ளன. அதற்கு நெடுந்தூரத்திற்கப்பால் பூவுலகமுள்ளது. பூமிக்கு நடுவேயுள்ள மேருவிலே எண்திசைப் பாலகரும், மும்மூர்த்திகளும் இடங்களுடையர். பூவுலகம் ஒன்பது பெரும்பிரிவுடையது. பெரும்பிரிவு வருடமெனப்படும். அவற்றுட் சிறந்தது பாரத வருடமெனப்படும். அஃதே கரும பூமியென்றும், ஏனையன போக பூமிகளென்றும் நூல்கள் கூறும். பாரத வருடமும், ஒன்பது கண்டமுடையது. அவற்றுள் குமரிக்கண்டமே சிறந்தது. பாரத வருடம், இப்போது மேலை நாட்டினர் அறிந்த பூவுலக முழுவது மென்பதும், குமரிக்கண்டம், இந்தியாவுமாமென்பதும் சிலர் கருத்து.

பூவுலகின்மேல், ஆதித்த மண்டலம் வரையுள்ள பகுதி புவலோகமாம். அதன்மேல் விண்ணவர் வைகுமிடம் சுவலோகம். அதன்மேல் முனிவர் வைகும் மகலோகமுள்ளது. பிதிரர் இருப்பிடம் சனலோகம். அதற்கு மேல் தவலோகம். அதற்கு மேல் அயன் வைகுஞ் சத்தியலோகம். செங்கண் மாலுலகம், உருத்திர லோகமாகிய சிவலோகம் என்பன

உள்ளன. காலாக்கினிருத்திரபுவன முதல் உருத்திரலோகம் வரை ஒவ்வொரு அண்டத்திலுமுள்ளன. பிற விரிப்பிற் பெருகும்.

இனி இரண்டாஞ் சூத்திர நான்காம் அதிகரணப் பொருள் வருமாறு:—இறைவன் ஆணையாகிய சிவ சத்தியாலே இருவினைப் பயன் நுகர்தற்குரிய ஆன்மாக்கள் பிறந்திறந்துழலும். அச்சிவசத்தியு முதல்வனும் வேறல்லர். சிவமுஞ் சத்தியுங் குணியுங் குணமும் போன்ற சம்பந்தமுடையரென்பார், "நீக்க மின்றி நிற்குமன்றே" என்றார். சமவாயம், சமவேதம், தாதான்மியம் என்ற சொற்களால் இச்சம்பந்தத்தை வடநூலார் கூறுவர். தாதான்மியமாவது பொருளான் ஒன்றே யாயினும், ஒரு வாற்றான் அது இருவகைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றல். உயிர்களோடு அத்துவித சம்பந்தமுடையனுய்க் கலந்திருப்பதாலும், மாயைக்குத் தாரகமாயிருத்தலாலும், முதல்வன் எங்குமுளன் என்பதால், அவன் வியாபகப் பொருளாவான். இறைவனைப் பொருட்டன்மையாற் கருதுமிடத்துக் கதிரவன் போலவும், பிற பொருட் கலப்பாற் கருது மிடத்துக் கதிர்த் தொகுதி யெனவும் தோன்றுதலான், அவன் இருதிறத்தன். தனி நிலையில் அவன் சிவனெனவும், புறப்பொருளிற்குச் சார்பாக நிற்கும் நிலையில் சத்தி யெனவும் பெயர் பெறுவன். தீயின் சத்தியே சுடுங்கால், சுடு சத்தி யெனவும், அடுங்கால், அடு சத்தியெனவும், ஒளி விடுங்கால், ஒளிச்சத்தி யெனவும், தொழில் பற்றிப் பல வேறு பெயர் பெறும். அதுபோல், இறைவனது சத்தி, பராசத்தி (மேலான வாற்றல்) ஆதி சத்தி (மூலவாற்றல்), இச்சாசத்தி (விழை வாற்றல்,) ஞான சத்தி (அறிவாற்றல்), கிரியா சத்தி (செயலாற்றல்) எனப் பல திறப்படும். சத்தியின்றொழிற் கிடமாய சுத்தமாயையும் பல் வேறு வகைப்பட்டு நிற்கும்.

ஒவ்வொரு சடப்பொருளுமே, தத்துவ காரியங்களில் வியாபித்தற்குரிய காரண ரூபமாய் நிற்குந் தன்மையும், தத்த மியல்பில் நிற்குந் தன்மையும் என இருதன்மையுடையது. அதன் வியாபக சத்தி, காரக சத்தியெனப்படும். பொருள்களை அறிவுறுக்குஞ் சொற்களின் சத்தி ஞாபக சத்தியெனப்படும். பிற விரிப்பிற் பெருகும்.

இனி மூன்றாவது சூத்திரக் கருத்து ஆயற்பாற்று. ஆன்மாவினுண்மையைக் காரணங்களால் நிறுவுவது இச்சூத்திரம். அக்காரணங்களை ஏழாகப் பகுத்தமையால், இச்சூத்திர அதிகரணங்களும் ஏழாயின. ஆன்மா இல்லை யென்று கூறுவார், உடல், பொறி, மனம் முதலியவற்றை முறையே இஃதான்மா, அன்று எனக்கழித்து, ஒன்றும் ஆன்மாவன்றாதலின், ஆன்மா சூனிய மென்பர். அங்ஙனங் கூறுவோர் அறிவுண்மையின், அவ்வறிவுடைய தொன்றே ஆன்மாவென்பார், முதல் அதிகரணத்தே, 'இலதென்றலின், ஆன்மா உளது' என்றார். இவ்வதிகரண உதாரணப் பாட்டினுள், ஆன்மா உலகப் பொருளுமில்லை, தனி முதலாகிய இறைவனுமில்லை, இரண்டிற்கும் வேறாயுள்ளது என்பது அறிவுறுத்தப்பட்டது.

மூன்றாஞ் சூத்திர இரண்டாம் அதிகரணத்தே உடல் ஆன்மாவன்றென்பார் 'எனது உடல்' என்று கூறுவது எது, அது ஆன்மாவாகுமென்றியம்பினர்.

மூன்றாம் அதிகரணத்திலே, ஐம்பொறிகள் பொருள்களை அறிதலால், அவற்றை ஆன்மா வென்பாரை மறுத்து, அவற்றுள் ஒன்று அறிந்ததைப் பிறிதொன்றறியாமையான், ஐம்புலனாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தினையு மறிகின்ற ஒரு பொருள் ஆன்மாவாமன்றி, ஐம்பொறிகள் ஆன்மாவல்ல வென்பார், "ஐம்புலனறிதலின் ஆன்மா உளதென்றது" என்றார். நான்காம் அதிகரணத்துள் அதனை

ஒப்புக்கொண்டு, சூக்குமவுடம்பே ஐம்பொறிகளையுஞ் செலு த்துவதாகலின், அஃதே யான்மாவென்பாரை மறுப்பார், ஐம் பொறிகளும் அடங்கின இடத்துளதாங் கனவினை நனவின் கண் அறிந்து நிற்பதெதுவோ, அதுவே ஆன்மாவென்றார். சூக்கும வுடம்பே கனவினை நனவின்கண் அறியுமாயின், கனவு, நனவு என்ற வேறுபாட்டுடன் அதனை அஃதறியாது. ஆன்மாவானது அகத்துப் புகுதலும் புறத்துச் செல்லுதலு மாய வேறுபாடுடைமையின், நனவிற்கு வேறாகக் கனவினை யறிகின்றது. ஆதலால், சூக்கும வுடம்பிற்கு வேறாக ஆன்மா உளதென்றார்.

இனி, பிராணவாயு நனவிலுங் கனவிலு மியங்குதலின், அதுவே ஆன்மா வென்பாரை மறுப்பார், துயிலுங்கால் இயங்கும் பிராணவாயுவிற்கு இன்பத்துன்ப வுணர்ச்சியுஞ் செயலும் இன்மையால், அவ்வுணர்ச்சியுஞ் செயலுமுடைய ஆன்மா பிராணனின் வேறாயுளதென்றார். இது ஐந்தாமதி காணக் கருத்து.

இதுகாறுங் கூறியவாற்றாற் சடமாகிய பிராணன் முதலி யன ஆன்மா வல்லவென்பது முடிந்தது. சித்துப் பொருளா கிய பிரமமே ஆன்மாவென்றா லென்னை யென்பாரை மறுத்து, இயற்கையாகவே முற்றுணர்வுடைய கடவுளுக்கும், அக்கட வுள் உணர்த்தினாலன்றி யுணராத உயிர்க்கும் வேறுபாடுண் மையின், கடவுளின் வேறாக உயிர்கள் உள்ளனவென்பார், 'உணர்த்த உணர்தலின், ஆன்மா உளது' என்றார். இது ஆறாம் அதிகாணம். இனி, எல்லாக் கருவிகளுங்கூடிய கூட் டமே ஆன்மாவென்பாரை மறுத்து, அக்கூட்டத்துள், நின் றியங்குவதாய ஆன்மா, அக்கூட்டத்தின் வேறாயுளதென்று குறிப்பார், "மாயாவியந்திர தனுவினுளான்மா" என்றார். அக்கூட்ட முழுவதும் மாயையாகிய சடப்பொருளாலாயது. சித்துப் பொருளாகிய ஆன்மா வேறு. அச்சடப்பொருள்

கட்கு வெவ்வேறு பெயர் உள்ளன. அவை யொன்றும் ஆன்மாவைச் சுட்டுமாறில்லை. அவைகளாலாய உடம்பு ஆன்மா இயங்குமிடம். கண்ணிற்குத் தீபம்போல, ஆன்மாவிற்கு, அறிதுணையாக உள்ளன அவை என்றியம்பி யருளினர். இது ஏழாம் அதிகரணம்.

முதற் சூத்திரத்தாற் பதியுண்மையும், இரண்டாஞ் சூத்திரத்தாற் பாசவுண்மையும், மூன்றாஞ் சூத்திரத்தாற் பசு உண்மையுங் கூறப்பட்டதாகலின், இம்மூன்று சூத்திரத்தையும் பிரமாண வியலென்ப.

இனி, நான்காஞ் சூத்திரப் பொருள் ஆயற்பாலது. ஆன்மாவினிலக்கணம் இச்சூத்திரத்தி னுணர்த்தப்பட்டது. உயிரானது அந்தக் கரணங்களுள் ஒன்று அன்றாயினும், அநாதியேபற்றியுள்ள ஆணவத்தா லறிவின்றி, அமைச்சரோடு கூடி நின்று தொழில் நடாத்தும் அரசன்போல, அந்தக் கரணங்களோடுகூடி நின்று ஐந்தவத்தைப் படுகின்றது என்பது சூத்திரக்கருத்து. இது ஆன்மாவின் பொதுவிலக்கணம். அந்தக் கரணங்களில் ஒவ்வொன்றையும் ஆன்மாவெனக் கூறுவது உபசாரம். முதலதிகரண ஏதுவை விளக்குமிடத்து ஆசிரியர் சிவஞான முனிவர் கூறுவதாவது:—

"ஐம்பொறிகளறிந்த விடயத்தைச் சித்தஞ் சிந்தித்தறியும். யான் சிந்தித்தேனென் றறியமாட்டாது. மனம் அதனைச் சங்கற்ப விகற்பஞ் செய்தறியும். யான் சங்கற்ப விகற்பஞ் செய்தேனென் றறியமாட்டாது. ஆங்காரம் ஒருப்பட்டெழுந்தறியும். யானொருப்பட்டெழுந்தே னென்றறிய மாட்டாது. புத்தி நிச்சயித்தறியும். யான் நிச்சயித்தேனென்றறிய மாட்டாது. அவ்வாறன்றி, யான் சிந்தித்தேன், பற்றினேன், எழுந்திருந்தேன், நிச்சயித்தேன் என்றறியுஞ் சித்தாகிய ஆன்மா, அந்தக் கரணங்களினின்று மாறுபாண்டையதென்பார், 'அவைதாம் பிரகாசமாய் நின்றே

அப்பிரகாசமாய் நிற்றலான' என ஏதுரைத்தார் என்பது. மெய்கண்ட பரமாசாரியர் இவ்வதிகரணத்துள், 'பிரகாசம்' 'அப்பிரகாசம்' என்ற சொற்களை அறிவுடைமை, அறிவின்மையென்ற பொருளில் வழங்கியுள்ளார். ஐம்புலன்கள் மனமுதலிய அந்தக் கரணங்களின் சார்பாற் பொருள்களை யுணரும். அந்தக்கரணங்கள் உயிரின் சார்பால் உணர்ச்சியெய்தும். ஐம்புல அறிவு, வாயிற் காட்சியெனப்படும். அதற்குப் பின், மனதிற்றோன்றுவதாய மானதக்காட்சி தோன்றும். அதன் மேல், புத்தியிற் றோன்றுவதாய தன்வேதனைக் காட்சி யுளதாம். இவைகள் ஆன்மாவிற்குத் தோன்றுதல் கடலிடையெழுந்து கரைசேருந் திரைபோலுமென்றார். உயிர்கள் பெயர், இனமுதலியனபற்றிப் பொருள்களை யறியுஞ் சவிகற்ப வுணர்ச்சிக்கு மனம், புத்தி முதலியன காரணமெனினும், அவற்றை இயக்கும் எழுத்தோசையாகிய நால்வகை வாக்குகள் உள்ளனவாகலான், அவைகள் எவ்வாறு அந்தக் கரணங்களைச் செலுத்துவன என்பதையுணர்த்துவார், 'அகாரம், அகங்காரத்தைச் செலுத்தும், உகாரம், புத்தியினைச் செலுத்தும், மகாரம், மனத்தினைச் செலுத்தும், சித்தத்தை விந்துவானது செலுத்தும், உயிரினை நாதஞ் செலுத்தும், இவ்வெழுத்துக்களைப் பகுக்காத விடத்து, அவை பிரணவமாம். அது சூக்கும வைந்தெழுத்தெனவும் படும். அது அசபையாய்த் திரிபுற்றுப் பிராணவாயுவை அடக்கியும் விட்டும் நின்றுணர்த்தவே, கணந்தோறும் நினைப்பும் மறப்பும் நிகழும். அவை நிகழ்தல் கடலிலே புதிது புதிதாய் அலை தோன்றியு மொடுங்கியும் வருமாறு போலும். பிரணவமே தூல வைந்தெழுத்தாய் வருமென்றும், அதனின்றே வர்ணம், பதம், மந்திர மென்பன தோன்று மென்றும், முனிவர் விளக்கினர். வாக்கு ஐந்தும் ஒன்றற்கொன்று காரணமாயும், நாதகலை அவற்றிற்கு மூலகாரணமாமென்றுங் கூறுப

இவ்வெழுத்துக்கள் சடமாகலின், இவற்றை அதிட்டிக்குங் கடவுளர் சுத்த தத்துவங்களிலுள்ளாரென்பார், நாதத்திற்கு சதாசிவனாரும், விந்துவிற்கு மகேசரும், மகரத்திற்கு உருத்திரரும், உகரத்திற்கு மாலும், அகரத்திற்கு அயனும் அதி தெய்வங்களாம் என்றார்.

அறிவுப் பொருளாகிய உயிர், கருவிகளினுதவியின்றித் தானே பொருள்களை யறியாதோவெனின், அதனோடு எப்போதுங் கலந்துள்ள ஆணவ மலத்தினால், அது அறிவின்றிக் கிடப்பதாகலின், கருவிகளினுதவியை அது வேண்டிற்றென்பார், ' இவ்வான்மாச் சகச மலத்தினால் உணர்வின்று ' என்றார். இது இச்சூத்திர இரண்டா மதிகரணம். மூலமலமானது உயிரினறிவை மறைக்கின்றதே யன்றி, அதனைச் சூனியமாக்கவில்லை யென்பார், "அதுதான் ஞான கிரோதகமாய் மறைத்துக் கொடு நிற்றலால்" என்று காரண முரைத்தார். உயிர்க்கு அறிவை மறைப்பது மாயை யன்று. உயிரினறிவிற்கு விளக்குப்போலப் பொருள்களைக் காட்டுவது மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடுத்து நிற்றல் ஆணவ மலத்தின் செய்தி. ஆதலால், மாயை வேறு; ஆணவ மலம் வேறு. அறிவென்பது ஆன்மாவின் குணம்; அது ஆன்மாவோடு எப்போதும் உளதாயின், ஆன்மாவிற்கு அறிவு ஒருகால் நிகழ்ந்தும், மற்றொருகால் நிகழாமலும் இருக்கக் காண்கின்றோம். அதற்கு ஒரு காரணம் வேண்டும். அக்காரணம் ஆணவமாம். மயக்க வுணர்வு ஆணவ மலமென்றல் பொருந்தாது. உணர்வு மயக்கமடைதற்குக் காரணமே ஆணவம். ஒரு சாரார் ஞான மின்மையே மலம் என்பர். உள்பொருள் அழியாதாகலின், ஞானம், மறைபடுமே யன்றி இல்லாமற் போகாது. ஒரு சாரார் தமோ குணமென்பதே மலம் என்பர். குண தத்துவமானது மாயையின் பகுதியாகலின், மாயை விளக்காதலின், குண தத்துவத்தின் பகுதி

யாகிய தமோ குணம் அறிவை மறைப்பதெப்படி? ஆன்மா விற்கு ஆணவத்தாலேற்பட்ட தீய தன்மைகள் வெளிப்படு தற்குத் தமோ குணமாகிய கருவி பயன்படுமே யன்றி, அது ஆன்ம வறிவை மறைக்கும் மலமென்று கோடற்கிடமில்லை.

மாயையானது உயிரின் அறிவைச் சுட்டுப் பொருளிலே அழுந்தச் செய்வதால், அது நில்லாதனவற்றை நிலையின வென்றுணருந் திரிபுணர்ச்சி ஏற்படுவதற்கேதுவாமேயன்றி, அது ஒன்றுந் தெரியாமையாகிய அறியாமையை விளைப்ப தில்லை. உயிரினறிவு உலகப் பொருள்களிலழுந்துமிடத்து, உயிர் இறைவனை அறியா வண்ணம் மறைப்பது ஆணவம். இவ்வதிகரணத்தே ஆணவ மல வியல்பு கூறப்பட்டது.

உயிரின் குணம் அறிவாகவே, அதற்கு மாறாய அறி யாமை, அதன் குணமாகாது. ஆதலால், ஆணவமலம் உயிர்க்கு வேறாயுள்ளதென்றறிக. சிவசத்தி உயிரினறிவை மறைப்பதன்று. ஆணவ மலம் மறைத்த காலை, அம்மலம் நீங்குவதற்குரிய பக்குவம் வரும் வரை, அம்மல சத்தியின் வழி நின்று உயிர்களை நடத்துவதே சிவசத்தியின் தொழி லாதலின், சிவசத்தி உயிரினறிவை மறைக்கின்றதென்பது பெருந்தவறென்றுணர்க. அணுக்களாகிய ஆன்மாவை ஆணவம் எப்போதும் பற்றி நிற்றலின், அது மூலமலம் எனப் பெயர் பெற்றது.

இனி, இச்சூத்திரம் மூன்றும் அதிகரணத்தே உயிர் ஐந்தவத்தை யுறுதல் கூறப்படுகின்றது. அவையாவன :— நனவு, கனவு, துயில், பேருறக்கம், உயிர்ப்படக்கம் என்பன. அவத்தை யுறுதற்குக் காரணம், தத்துவங்களின் தொழிற் பாடே. கருவிகளெல்லாவற்றோடுங் கூடிய உயிர் மாட்டு, ஐம்பூதங்களும் தன் மாத்திரைகளும் அவற்றாலாய கருவி களும் சத்தி மடங்கித் தொழிற்படாது நிற்குங்கால், ஐம் பொறிகளின் தொழிற்பாடு செவ்விதின் நிகழாது, மெத்தென

நிகழ, அவ்வாறே வினைப்பொறிகளின் தொழிற்பாடுமாக, கண்டுங் காணாதும், கேட்டுங் கேளாதும், தீண்டியுந் தீண்டாதும், சுவைத்துஞ் சுவையாதும், மூரன்றும் மூரலாதும் நிற்கு நிலை சாக்கிரமெனப்படும். அவ்வவத்தையிலே அறிவுப் பொறியைந்தும், வினைப் பொறியைந்தும், அவற்றிற்குப் புலனாவன பத்தும், அந்தக் கரணம் நான்கும், புருடனும், பத்து வாயுக்களும் தொழிற்படுமாதலின், சாக்கிரத்தே தொழிற்படுங் கருவிகள் முப்பத்தைந்தென்ப. சாக்கிரம் நிகழுமிடம் புருவநடு. கனவிலே, அறிவுப் பொறிகளும் வினைப்பொறிகளும் தொழிற்படாமையின், தொழிற்படுங் கருவிகள் இருபத்தைந்தாம். கனவிற் கிடம் கழுத்து. துயிலாகிய சுழுத்தி நிலையிலே, இருவகைப் பொறிகளும், அவற்றிற்குப் புலனாவனவும், பிராணன் ஒழிந்த பிறவாயுக்களும், அந்தக் கரணங்களும் சத்தி மடங்கவே, சித்தம் உடம்பிற்குக் காவலாய் நிற்பப் பிராணவாயுவும் புருடனுமே தொழிற்படும். சித்தம் இதயத்திற் பொருந்தி யிருத்தலால், இதயமே சுழுத்திக்கிடமாய். சித்தத்தின் செயலும் அற்ற இடம் துரியம். இதற்குத் தானம் உந்தி. அங்காரத்தாற் செல்லும் பிராணனுமடங்கிய நிலை துரியாதீதம். இது மூலாதாரத்தில் நிகழ்வது.

சாக்கிரத்தின் உட்பிரிவாக ஐந்தவத்தை நிகழற்பாலதே. பொருள்களை நுகருமிடத்தே அவை நிகழ்வன. ஒன்றினை யறியுங்கால், அதனை விட்டு விட்டறிவதல்லது, இடையறாது அறிவதில்லை. விட்டு விட்டறிதற்கேற்ப இயக்குங் கருவிகளுள் ஒன்றே, பலவோ செயற்படுதலால், இவ்வவத்தைகள் ஏற்படுகின்றன. இயக்குங் கருவிகளாகிய சுத்த தத்துவங்கள் ஐந்தாகலின், விடய நுகர்ச்சிக்கட்படு மவத்தையும் ஐந்தாயின.

உயிர், ஆணவமலத்தோடு மாத்திரங் கலந்து நிற்கும் நிலை கேவலமெனப்படும். மாயாகாரியமாய கருவிகளோடு

கூடிய நிலை சகலமெனப்படும். மலத்தில் நீங்கிய நிலை சுத்த மெனப்படும். கேவல நிலையிலே உயிர்கள் ஆணவமலமறைப் பால் யாதும் உணரா. சகல நிலையிலே உயிர்கள் உலகத்தை யறியும். சுத்த நிலையிலே அவை கடவுளையுந் தம்மையு மறியும்.

இனி, ஐந்தாஞ் சூத்திரப் பொருள் வருமாறு:—உயிர்களை யியக்குபவன் முதல்வனாதலின் அவன் செய்யுமுப காரத்தை இதன்கண் உணர்த்துகின்றார். முன்சூத்திரத் திலே ஆணவ முதலிய பாசத்தினிலக்கணமுங் குறிப்பாக வுணர்த்தப்பட்டவாறே இச்சூத்திரத்தும் அது தெரிக்கப் பட்டதோர்க. இச்சூத்திரக் கருத்து:—"ஆன்மாவினால், தமக்குப் புலனாவனவற்றை யறியும் மெய், வாய், கண், மூக்கு, செவி யென்பன தம்மையும், தம்மைச் செலுத்தும் ஆன் மாவையும் அறியமாட்டா. அதுபோல, உயிர்களும் தம் உணர்விற்கு முதலாகிய அருட்சத்தியினாலே வினைப்பயன் களை யறிந்து நுகர்கின்றன வெனினும், தம்மையும் தம்மைச் செலுத்துந் திருவருளினையுமறியமாட்டா. திருவருட்சத்தி முன் உயிர்கள் தொழிற்படுதல், காந்தத்தின்முன் இரும்பு தொழிற்படுதல் போலுமாதலின், திருவருட் சத்தியுடைய இறைவன் விகாரப்படுத லில்லையென்று தெளிக." என்பதே.

ஐம்பொறிகளும் ஆன்மாவினாலே தொழிற்படுகின்றன வென்பதே,இச்சூத்திர முதலதிகாணக் கருத்து. இதன், இர ண்டாமதிகாணத்திலே, 'ஆன்மா, தமது முதலாலே யுணரு" மென்றனர். உயிரின் சார்பின்றி, எவ்வாறு பொறிகள் உணர்ச்சியிலவாமோ, அதேபோல உயிரும் முதல்வன் சார் பின்றிப் பொருளை யறியுமாறில்லை. முதல்வன் அறிவித்தா லன்றிப் பொருளை யறியுமாற்றல் உயிர்க்கில்லை. இறைவன் காட்டவே, உயிர் பொருள்களைக் காணுமிடத்து, வினையினள வாகவே அவற்றைக் கண்டு நுகர்தலால், அவ்வினைப்பயன்

உயிர்க்குள்ளதே யன்றி இறைவனுக்கில்லை. சிவன் அசத்தாகிய மாயா காரியங்களை நுகராதவனாகலின், 'மன்னு சிவன்' என்ற உதாரண வெண்பாவிலே 'சிவன்' என்ற சொல் பேரின்பத்தையும் முற்றறிவினையும், ஆய தன்மையையுமுடைய முதல்வனைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டது. ஆன்மா ஒன்றையுணருங்கால், முதல்வனின் வேறாய்விளங்குதலுமின்றி, அவனே யாதலுமின்றி, உடனாயடங்கி நின்றுணர்வனென்பார், கதிரவனொளியி லடங்கிய விண்மீனை உயிர்க்கு உவமைகூறினர். இவ்வுவமை கூறிய வெண்பாவினுள், திருவள்ளுவர் குறட்பகுதியாய, 'கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியுமைம்புலன்' என்பது எடுத்தாளப்பட்டது. கதிரவனுங் கதிரும்போலச் சிவமுஞ் சத்தியுமாமென்றனர். அது மெய்யுணர்ந்தாரே அறியற்பாலது. இச்சூத்திரத்திலே முதற்காரணந் துணைக்காரண மென்பவற்றி னியல்புரைக்கப்பட்டது.

இனி, ஆறுஞ் சூத்திரத்திலே, பதிப்பொருளின் சிறப்பியல்பு கூறுகின்றார். பதியின் பொது இயல்பு இரண்டாஞ் சூத்திரத்தே குறிக்கப்பட்டது. இதன்கண், சத்தும் அசத்தும் வரை செய்துணர்த்தப்படுகின்றது.

அறிந்தனுபவிக்கப்படும் உலகம், உயிராற் கருவிகள் வாயிலாக அறியப்படும். தோன்றுமுலகம் அழியுந் தன்மையது. ஆதலால், இறைவன் உலகத்துப் பொருள்போல அறியப்படுவனாயின், அவனுக்கும் அழிவுண்டாம். ஆதலால், அவன் அங்ஙனம் அறியப்படமாட்டான். அவன் உயிரால் எவ்வாற்றானும் அறியப்படாதவனெனில், அவன் சூனியப் பொருளாவன். அவன் அத்தகையானன்மையின், ஒருவாற்றால் அறியப்படாதவனாயும், ஒருவாற்றால் அறியப்படுபவனாயுமுள்ள பேரறிவுடைய பெரும்பொருள் என்பார், அவனைச் 'சிவசத்து' என்றார். சட உலகத்திற்கு மூலமாகிய மாயை சட சத்தாகலின், அறிவுடைய சத்தினைச் 'சிவசத்'தென்றார்.

இதனுல் சித்துமாய்ச் சத்துமாயிருப்பது இறைவ னியல்பென்று தெரித்தவாறும். "வாலறிவ" னென்ற திருவள்ளுவர் கருத்து மிஃதேபோலும்.

ஞானம், பதிஞானம், பசுஞானம், பாசஞானமென முத்திறப்படும். இறைவனை யறியும் ஞானம், பதிஞானம்; இறைவனறிவு கொண்டே இறைவனறியற்பாலன். உயிர் தனது சுட்டறிவு கொண்டு முதல்வனை யறியாது. உயிர் தன்னைப் பாசத்தின் வேருக அறியுமறிவு பசு ஞானம். பாசப்பொருள்களை யறியுமறிவு பாசஞானம். பசுவினுண்மை யியல்பும், பாசத்தினுண்மை யியல்பும், இறை ஞானத்தாலேயே அறியற்பாலன. யான் இதனை யறிந்தே னென்றபோது இது என்ற புறப்பொருளாய பாசமும், யான் என்னும் பசுவும், பாசஞானத்திற்கு விடயமாகின்றன.

இனி, இச்சூத்திர முதலதிகாரணத்தே, அறிவினுலறியப்பட்ட சுட்டு அசத்தென்ப துணர்த்தப்பட்டது. உள்ளதென்ற உணர்ச்சிக்குமாத்திரமன்றி, இல்லதென்ற உணர்ச்சிக்கும், அழிபொருள் யாவும் இடந்தருதலின், சுட்டுப்பொருள் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்பதெனப் பரமாசாரியர் குறித்தருளினர்.

சுட்டுப் பொருள்போல அறியப்படுதலும், சூனியப்பொருள்போல அறியப்படாமையுமாகிய இரண்டு தன்மையுமின்றிச் சூக்குமவாக்காகிய நாதமுடிவாகவுள்ள பாசஞானத்தாலும்,பசுஞானத்தாலும் அறியப்படாமல்,பதிஞானத்தாலுணரப்படுவதாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்றென்பதனை இரண்டாம் அதிகாரணத்துள் ஆசிரியர் விளக்கினர். உயிரானது முதல்வனைத் தன்னறிவினு லறியக்கூடுமென்னில், அவன் உயிர்க்கு வேருவான் வேண்டும். அவன் உயிரோடு அத்துவிதமாய்க் கலந்திருப்பவ னுகலின், தன்னிற் பிரித்து அவனை உயிர் எப்படி யறிதல் கூடும்? அவன் உயிரறிவிற்கு அப்பாற்பட்டு நுட்பமாய்க் கலந்திருப்

பானுகளின், ஞாலமாகிய தன்னறிவினாலே அதனைக் கடந்துள்ள முதல்வனை உயிர் அறியமுடியாது. உயிர் கண்ணுக்குப் பொருளை புணர்த்தினும், கண் உயிரினை யறியமாட்டாது. அதுபோல உயிரொடு கலந்து உயிர்க்குப் பொருள்களை புணர்த்து முதல்வனை உயிர் தன்னறிவா லறியமாட்டாது. ஆதலால் இறைவனறிவு கொண்டே அவனை உயிர் பிரிப்பின்றி யறியும். இறைவனருளில் ஒன்றி நின்ற உயிர் அவ்வருளை கண்ணைக்கொண்டு அறிதலையே இறைவ னறிவா லறித லென்றவாறு. 'அவனருளே கண்ணாகக் காணினல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே' என்றதுமது. இச்சூத்திர பாடியத்துள், முனிவர் சிவசமவாதத்தை விரிவாக மறுத்துள்ளார். பாடியமெழுதுங் காலத்தே முனிவர் உயர்ந்த உள்ளநிலை யடைந் திருந்தமையால், பிறசமயத்தார் யாரையுங் கடிதலின்றி, இணக்கமாகவே அவரவர் கொள்கையை மறுப்பாராயினர். சிவஞான பாடியம் 313-ம் பக்கத்திலே "எத்தன்மைய ராயினும், சிவதீக்கை யுடையராய்ச் சிவாகமத்தில் விதித்தவா றொழுகி அகச்சமயத்தில் நிற்பின், அவரைப் பழிக்கலாகாமையின், அவரறிவு அவ்வளவிற்றென்று போதலே பொருத்த முடைத்து" என்ற முனிவர் திருவாக்கானும் அது தெளியப்படும்.

இச்சூத்திர பாடியத்துள், அத்துவித மென்ற சொல்லிலுள்ள அகரத்திற்குச் சங்கராசாரியர், இராமானுசர், சிவாத்துவித சைவர் முதலியோர் இன்மைப்பொருள் கொண்டமையும், பேதவாதியாகிய மத்துவாசாரியர் முதலியோர் மறுதலைப் பொருள்கொண்டு 'இரண்டின் மறுதலை ஒன்றெனின், ஒன்றின் மறுதலை யிரண்டாம்' என்று கூறித் துவிதங்கொண்டமையும், சைவசித்தாந்திகள் அன்மைப் பொருள் கொண்டமையும், முனிவர் தெள்ளிதின் விரிவாக விளக்கிப் போந்த

ணர். பரப்பிரமப் பொருள் ஒன்றே உள்ளதென்பார், கேவலாத்துவிதிகள். தனது சத்தியானும் தன்னுடைமையுடைய பசு பாசங்களானும் விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற பரப்பிரமம் ஒன்றே யென்பார், விசிட்டாத்துவிதிகள் ஆவர். அத்துவித மென்பது, பலவகையான சம்பந்தத்துள், ஒருவகைச் சம்பந்தத்தை யுணர்த்து மென்று தெளிக. அத்துவிதம், ஐக்கியம், தாதான்மியம், சமவாயம், சையோகம், சொரூபமெனச் சம்பந்தங்கள் பல. ஆற்றுநீருங் கடல்நீருஞ் சேர்வது ஐக்கியசம்பந்தம். அதனாற் பொருட்டன்மை யொன்றே என்பது முடியும். குணமுடையானுக்குங் குணத்திற்கு முள்ள சம்பந்தம் தாதான்மியம். அதனாலும் பொருட்டன்மை ஒன்றே யென்பதே கருத்து. ஆன்மா முதல்வனின் குணமன்று. தானே குணிப்பொருளா யுள்ளது. தாதான்மியத்தை நியாயநூலார் சமவாய மென்பர். விரலும் விரலுஞ் சேர்ந்தாற்போல இருப்பது சையோக சம்பந்தம். அது ஒன்றிலொன்றை வியாபித்திருப்பதை யுணர்த்தாது. சொரூப மென்பது வடிவமுடையானுக்கும் வடிவத்திற்கு முள்ள சம்பந்தம். கடவுளின் வடிவம் உயிரன்றாதலின், அச்சொல் கடவுளுக்கும் உயிர்க்கு முள்ள சம்பந்தத்தை யுணர்த்தாது. இருபொருள் அதுவதுவாய் ஒற்றுமைப்பட் டொன்றாய் நிற்பதே அத்துவித மெனப்படும். உயிர்க்குயிராய்நிற்கு முதல்வனது சம்பந்தம் அஃதே யாதல் தெளிக.

சிவானந்தத்தை நுகர்தற்குரிய உயிரின் தன்மையை முனிவர் தெளிவாகவிளக்கியுள்ளார். ஆன்மாவானது சார்ந்ததன் வண்ணமாய் நிற்கு மியல்புடைமையின், எதைச் சார்ந்ததோ அதனோ டத்துவிதமாய், அதன்கண் வியாபியமாய் நிற்கும். தனக்குவேறாய உலகப்பொருளைச் சார்ந்து அதன்கண்வியாப்பியமாய் நிற்றல், மலத்தா லுளதாஞ் செயற்கைநிலை யெனவும், அறிவுப் பொருளாய்த் தனக்கு ஒத்த சிவத்தைச்

சார்ந்து அதனில் வியாப்பியமாய் நிற்றல் இயற்கை நிலை யெனவு மறிக. ஆன்மா அழுந்தி யறிதலால், உலகத்தையும் சிவத்தையு மனுபவிக்கும். சிவம், பசுபாசங்களி னழுந்தாமை யால், அவை, பரம்பொருளுக்கு அனுபவப்பொருளாகா. ஆத லால் முதல்வன் ஒன்றையும் தன்பொருட்டு வேண்டாதவன். உயிரே சிவத்தின்பால் பேரின்பப் பயனெய்துதற் குரியது.

நான்காஞ் சூத்திரத்திலே உயிரிலிலக்கணமும்,ஐந்தாஞ் சூத்திரத்திலே பாசவிலக்கணமும், ஆறாவதிற் பதியிலக்கண மும் போந்தமையின், இம்மூன்றும் இலக்கண வியலென்னப் படும்.

இனி, ஏழாஞ் சூத்திரப் பொருள் வருமாறு:—முத்தி பெறுதற் கேதுவாய உயிரின் சிறப்பிலக்கணம் இதன்கட் கூறப்படும். ஏழாஞ் சூத்திரக் கருத்து வருமாறு:—சிவசத் தின் முன்னர், அசத்தாகிய நிலையிலாப் பொருளெல்லாம் பாழேயாகலான், சத்தாகிய சிவம் அசத்தாகிய பாசத்தை அறிந்து அனுபவியாது; பாசம் அறிவில்லாத சடமாகலின், சத்தாய சிவத்தை அறிந்தனுபவியாது. ஆதலால், சத்தே யாகவும் அசத்தேயாகவுமில்லாத சதசத்தாகிய ஆன்மா, இரண்டையும் அறிந்து அனுபவிக்கவல்லது. சூத்திரக்கருத்து அதிகரணங்களா லினிது விளங்கும். முதலதிகாணத்தே 'சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது' என்றமையால், பாழென்றது விளங்காமைபற்றி யென்றறிக.

சத்தானது பொருள்களைச் சுட்டியறியுந் தன்மையுடைய தன்றாகலின், அதன் முன் சுட்டி யுணரப்படுவதாகிய அசத்து எவ்வாறு தோன்றும்? சுட்டுணர்வு முற்றுணர்வைத் தடுப்ப தாகலான், அஃதில்லாமை முற்றுணர்வுக்கு மேம்பாடாவ தன்றி யிழுக்காகாது. தன்னுள் அடங்கிய பசுபாசங்களை இறைவன் சுட்டியுணராமல் அறிவன் என்பது கருத்து.

இரண்டாவது அதிகரணத்துள், அசத்திற்கு அறிவின்றென்பது விளக்கப்பட்டது. மூன்றும் அதிகரணக் கருத்தாவது பாசஞானமென்பது, பாசம் வாயிலாக நிகழும் பசுஞானமே. சத்தாகிய சிவத்தையும் அசத்தாகிய பாசத்தையுமறியுந் தன்மையுடையதாய், அறிவிக்க அறிவதாய் உள்ளது ஆன்மாவென்பது. ஆன்மா அறிவிக்கவே யறியும்; தானாக முதல்வன்போல அறியுமாற்றலுடையதன்று. அசத்தையாவது சத்தையாவது சார்ந்தவிடத்தே, அவ்வவற்றின் வண்ணமாய் நிற்கும் ஆன்மவியல்பு புலப்படுதலால், அவ்விரண்டினையுஞ் சார்ந்தே, ஆன்மா தன்னியல்பை யறியும். ஆன்மவியல்பினை முனிவர் 'மயக்கம துற்று மருந்திற்றெளிந்தும்,' என்னும் வெண்பாவின் பொருள் விளக்குமிடத்து அழகாக விரித்துரைத்தார். மயக்கமாகிய அறியாமை, அறிதற் கருவியில்வழி மேற்பட்டும், அஃதுள்வழி நீங்கியும், நிலைபேறில்லாததாக விருப்பதால், அது உயிர்க்குயிராயுள்ள முதல்வனது மெய்ஞ்ஞானத்தைப் பற்றாது. கடலிலே உப்பானது நீரிற் பற்றுவதே யல்லாமல், அதற்கு இடங்கொடுக்கும் ஆகாயத்திற் பற்றாமைபோல, மயக்கமானது உயிரைப் பற்றுமேயொழிய முதல்வனைப் பற்றாது என்றார்.

எட்டாஞ் சூத்திரத்திலே பதிஞானத்தை ஆன்மாவுணரு முறையினைக் கூறுகின்றார். பல்பிறவிகளிலே செய்த பெருந்தவத்தினால், ஒரு பிறவியிலே உயிர்க்குயிராய பரம்பொருள் உயிர்க்குக் குருவாய்த் தோன்றி உயிரை நோக்கி, 'நீ நின்பெருந்தகைமை யறியாது மயங்கி இடர்ப்பட்டாய், நின் பெருந்தகைமை இத்தகையது' என்றறிவுறுப்ப, உயிரானது ஐம்புல வேடர் கூட்டுறவினை விட்டு நீங்கி இறைவனோடத்துவிதமாய் நிற்கும் நிலையினை யுணர்ந்து, அம்முதல்வன் திருவடிகளை யணையும்.

இச்சூத்திரத்தின் முதலதிகாரணத்தே, ஞானத்தாலேயே வீடென்பதும், அது சரியை கிரியை யோகத்தின் பயனாய் வருமென்பதும் உணர்த்தப்பட்டது. உலக வின்பங் கருதிச் செய்யப்படும் நல்வினையின் பயனானது, பசிக்கு உணவு போலும். உண்ட வுணவு செறித்தவுடன், மீட்டும் பசியுண்டாம். அதுபோல, அந்நல்வினையானது நிலைத்த இன்பத்தைக் கொடாது. உலகப் பயன் கருதாது, வீடு கருதிச் செய்யுஞ் சரியை, கிரியை, யோகமென்பன, இருவினை யொப்பினை உயிர்க்கு உண்டாக்கி, ஞானத்திற்கு வழி திறக்கும். இருவினை யொப்பாவது நல்வினையுந் தீவினையும் உலக இன்ப துன்பத்தைப் பயத்தலால், அவை யிரண்டின் பயனிலும் ஒத்த முறையில் விருப்பமில்லாமையாகும். நல்வினைகளெல்லாம் பசு புண்ணியமெனப்படும். சரியை, கிரியை, யோகம் பதி புண்ணியமெனப்படும். பசு புண்ணியம், சிவ புண்ணியமென்ற பகுப்பு, செய்வாரது கருத்து வேறுபாடு பற்றியே யென்பது, முனிவரால் பாடியத்துள் நன்கு விளக்கப்பட்டது. சிவ புண்ணியம், பொதுவெனவும், சிறப்பெனவும் இருவகைப்படும். வேள்வியிற் பல தேவரோடு, சிவபிரானை வழிபடுவது பொதுவெனவும், சிவாலயத்திற் சிவபிரானை வழிபடுவது சிறப்பெனவுமறிக. சிறப்புச் சிவ புண்ணியமும், சிவ தீக்கையின்றிச் செய்யப்படுவது, தீக்கை பெற்றுச் செய்யப்படுவது என விருதிறப்படும். மெய்யன்பாற் செய்யப்படுவது, புகழ், அதிகார முதலிய பயன் கருதிச் செய்யப்படுவது என்ற இருபாகு பாடு முண்டு. முன்னது உண்மைச் சரியை கிரியை யோக ஞானமெனப்படும். பின்னது, உபாயச் சரியை, கிரியை, யோக ஞானமெனப்படும்.

சரியை, இறைவனது தூல வடிவத்தை வழிபடுவதாகும். கிரியை, இறைவனது சூக்கும வடிவத்தை வழிபடுவது. யோகமானது, அவனது அதிசூக்கும வடிவத்தை

வழிபடுவது. ஞானமானது, அகண்டாகார நித்தவியாபகசச்சி தானந்தப் பிழம்பாகிய பரம்பொருளை நேரே வழிபடுவது. சரியை, புறவணக்கம். கிரியை, அகப்புற வணக்கம். யோகம் அகவணக்கம். ஞானம், அறிவால் எங்கும் வழிபடுவது. சரியைக்குப் பயன், புவனபதிகளின் உலகமெய்தி, ஆண் டுள்ள போகங்களை நுகர்வது. கிரியைக்குப் பயன் புவன பதிக்கு அணுக்கத் தொண்டராய் வைகுதல். யோகத்திற்குப் பயன், புவனபதிக்கு ஒத்த வடிவுடைமை. உயர்தரமல்லாத ஞானத்திற்குப் பயன், புவனபதிகளால் அதிட்டிக்கப்படுதல். இவற்றின் பயன்களை விரிவாக, முனிவர் இனிது தொகுத் துரைத்த பகுதி வருமாறு:—

உபாயச் சரியையிற் சரியை முதல் உபாய ஞானத்தில் ஞானம் ஈறாகிய பதினாறு வகையினின்று பல்வேறு வகைப் பட்டு விரியுஞ் சிவ புண்ணியங்களுக்கெல்லாம் பயன், அவ்வ வற்றிற் கேற்பக் காலாக்கினிருத்திரர் முதல் குண தத்துவ மத்தகத்திற் சீகண்ட புவனத்தின் கீழுள்ள உருத்திரரான அவ்வப்புவன பதிக ளுலகத்திற் சாலோக முதலியவற்றைப் பெறுதலாம். உண்மைச்சரியை முதல் உண்மை யோகத் தில் ஞானம் வரை விரியுஞ் சிவ புண்ணியங்கட்குப் பயன், சீகண்ட புவன முதல், சுத்த வித்தைக்குக் கீழுள்ள அவ்வப் புவன பதிகளுடைய சிவலோகத்துச் சாலோக முதலிய பத விகளைப் பெறுதலாம். உண்மை ஞானத்திற் சரியை முதல், யோகமீறாக விரியுஞ் சிவ புண்ணியங்களுக்கு, சுத்த வித்தை முதலிய அதிகார தத்துவ புவனத்துச் சாலோக முதலிய அபரமுத்தியைப் பெறுதலாம். ஞானத்தின் ஞானங்களுள் முடிவான ஞானத்திற்குப் பயன், பரமுத்தியே. ஏனையவற் றிற்கு, இலயதத்துவத்திலுள்ள அபரமுத்திப் பயனெனக் கொள்க.

சரியை, கிரியை, யோகமென்னும் நற்றவ முற்றிய விடத்தே, மலத்திற்குத் துணையாய் நின்று உயிர்களை நடாத்திய மறைப்புச்சத்தி மலம் நழுவுதற்குரிய தருணத்திலே பராசத்தி வடிவமாய் உயிரின்கட் பதிதலே சத்திநிபாதமெனப்படும். 'சத்தியின்வீழ்ச்சி' யென்பது அதன்பொருள். அப்பெயர்க் காரணத்தை முனிவர் அழகாக விளக்கினபகுதி வருமாறு :— ஓரவைக்களத்தின் நடுவே ஒரு கல்வந்து வீழ்ந்தால், அவ்வீழ்ச்சி, அவ்வவைக்களத் துள்ளாரை ஆண்டு நின்று மகல்விக்கும். அதுபோலச் சத்திநிபாதம் நிகழ்ந்த மாத்திரையே அஃது அவ்வான்மாவை, மனைவி, மக்கள் முதலிய உலகத்துழனியின் அச்சம் நிகழ்ந்து அவ்வுலக வாழ்க்கையினின்று வெரீஇப் போந்து உண்மைக்குரவனை நாடிச் செல்லுமாறு செய்வித்தலின், அவ்வொப்புமை தோன்றச் சத்தி நிகழ்ச்சி யென்னாது சத்தி வீழ்ச்சி யென்றோதப்பட்டது.

மலபரிபாக மென்பது, ஆணவமலம், தனது சத்தி தேய்ந்தொழிதற் குரிய துணைக்காரணங்களோடு கூடுதல்.

இச்சூத்திரத்தின் இரண்டாமதிகரணத்துள், சரியை முதலியன, ஞானத்திற் கேதுவாயன்றி ஞானத்தை அவை தாமே பயக்கமாட்டா. இறைவனே குருவாய்வந்து ஞானத்தையுணர்த்துவன். உயிரோடு அத்துவிதமாய்க் கலந்துள்ள முதல்வனே உயிரின் பக்குவமறிந்து அதற்குத் தன்னைக் காட்டவல்லா னாகலின், அவனே குருவாய் வருவனென்றார். சிவாகமங்களிலே ஆசானை அதிட்டித்து நின்று இறைவனுணர்த்துவனெனக் கூறினும் பொருட்டன்மையால், இறைவனே ஆண்டுக் குருவாதல் தெளிக. ஆணவமல மாத்திரமுடைய விஞ்ஞானகலர்க்கு இறைவன் குருவாய் வெளிப்பட்டுத் தோன்றாது, உண்ணின்றவாறே உண்மையுணர்த்துவன். ஆணவமுங் கன்மமுமுடைய பிரளயாகலருக்கு முத்தொழில்

நடத்துவான் கொண்ட திருமேனியொடு தோன்றி உண்மையை அறிவுறுத்துவன். மும்மலமுடைய சகலர்க்கு அவர் வடிவுபோன்றதொரு வடிவத்துடன் தோன்றி ஞானத்தை நல்குவன். மூவகை உயிர்களுக்கும், முறையே தன்மையினும், முன்னிலையினும், படர்க்கையினும் உணர்த்துமாறறிக. ('அருள் வீழ்ச்சி') சத்திநிபாதம், மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிர தரம் என நாற்றிறப்படும். மந்ததர சத்திநிபாதமுடையார், சாதக நிலை யெய்துவர். மந்த சத்திநிபாத முடையார், சீவன் முத்திநிலையெய்துவர். தீவிரசத்திநிபாதப்பயன், அபர முத்தி. (அதாவது சுத்ததத்துவ புவனங்களி னெய்துதல்). தீவிர தரமுடையோர், இரண்டறக் கலத்தலாகிய பரமுத்தி யடைவர். ஞானநூலுணர்வு மாத்திரம் போதாது, இறைவனே குருவாய்வர வேண்டுமென்பதற்குக் காரணம் 'இல்லா முலைப்பாலும்' என்ற செய்யுளுள் விளக்கப் பட்டது. மூன்றும் அதிகரணத்துள், இறைவன் உணர்த்தாமல், உயிர்கள் தம்மை யுணரமாட்டா. ஐம்பொறிகள் வாயிலாகப் புலப்படும் பொருள்களின் வண்ணமாய், உயிர்கள் நிற்பன வாகலான் "ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா" வென்றார்.

நான்காம் அதிகரணத்தே, உயிர், இறைஞானத்தால் தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல்வன் சீபாதத்தை அணையுமென்பதறிவுறுக்கப்பட்டது. பந்த நிலையில், கருவிகள் பிரிந்து நீங்கியவழி, உயிர்க்கு மலம் தாரகமாம். அவைகள் நீங்கிய இடத்தே, சிவமே உயிர்க்குத் தாரகமாம். மலத்தைப்பற்றிக் கேவல நிலையில் நின்ற உயிர் மீளவுங் கருவிகளைக் கூடிச் சகல நிலையடைதல்போல, சிவந் தாரகமாய்ச் சுத்தநிலை யெய்திய உயிர் மீண்டுங் கருவிகளோடு கூடுமோவெனிற் கூடாவென்பதனை உதாரணச் செய்யுளில் வலியுறுத்தினர்.

இவ்வதிகாரணத்துள், திருவடி ஞானத்தைப் பெற்ற உயிர் மீளப் பாசஞானத்திற் செல்லுதல் இல்லையெனவும், பாசஞானத்திற் செல்லுதல் இழுக்காமாதலின், மீளாமைக் குரியன செய்யவேண்டுமெனவும் அறிவுறுத்தப்பட்டது.

இனி, ஒன்பதாஞ் சூத்திரத்துள், பாசஞானத்திற்கு மீளாமைக் கேதுவாகிய ஆன்மசுத்தி பண்ணுமாறு தெரிக்கப்பட்டது. முற்சூத்திரத்திற் சிவரூபமும், இச்சூத்திரத்திற் சிவதரிசனமுங் கூறப்பட்டதென்றலு மொன்று. இச்சூத்திரக் கருத்தாவது:—"பசுஞானத்தாலும் பாசஞானத்தாலு மறியப்படாத முதல்வனை, அம்முதல்வன் அளித்த ஞானமாகிய கண்ணினாலே தன்னறிவின்கண்ணே ஆய்ந்தறிக. கானல்போல நிலையில்லாத பாசக்கூட்டங்களினின்று விலகவே, பதிஞானமானது, பிறவித் துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாகத் தோன்றும். அந்த ஞானத்தால், முதல்வனைக் கண்ட காட்சி சலியாமைப் பொருட்டு, அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்தினை விதிப்படி எண்ணுக" என்பதே.

இச்சூத்திர முதலதிகாரணத்தே சிவஞானத்தாலேயே சிவனைக் காணலாமென்பது நிறுவப்பட்டது. சிவஞானத்தைக் காண்டல் எவ்வாறெனில், 'நிலையில்லா உலகை அசத்தென்று கண்டு கழித்தவிடத்தே ஞான சொரூபம் விளங்கும்' என்றார். இறைவன் மூவகைப் பிரபஞ்சத்திலுங் கலந்தும் அப்பாற்பட்டும் நிற்பானாகலின், அப்பிரபஞ்சத்தைக் கழித்தொதுக்கவே, அவனது அளவிறந்த நிலைமை தோன்றும். கருடபாவனையால் விடந்தீரும் விதத்தை முனிவர் நன்கு விளக்கினர். அது வருமாறு:—ஆதிபௌதிக கருடன், ஆதிதைவிக கருடன், ஆத்தியான்மிக கருடன் எனக் கருடன் மூன்றுவகைப்படும். இவ்வாறே பொருள் தோறுங் கண்டுகொள்க. அவற்றுள் உலகத்திற் காணப்படுங் கருடன்

ஆதிபௌதிக கருடன். அதற்கு அதிதெய்வமாய் மாந்திரிகன் உள்ளத்தில் அதுபோல வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படு மந்திரம், ஆதிதைவிக கருடன். அம்மந்திரத்தினிடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன். அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்றுவந்த பயிற்சி விசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக அநந்நியபாவனை செய்து தன்னறிவு அதன் வசமாம்படி உறைத்துநிற்றல். அங்ஙனம் நின்று அம்மந்திரக் கண்கொண்டு பார்க்கவே, அஃது அவ்விட வேகத்தை மாற்றுதல் ஒருதலை.

மூன்றாம் அதிகரணத்துள், திருவைந்தெழுத்தை நினைக்குமுறை விளக்கப்பட்டது. இதனுள் 'உச்சரிக்க' வென்றது அறிவாற் கணித்தலேயாமென்று முனிவர் விளக்கினர். சூத்திரத்துள் 'எண்ணுக' என்பது 'தியானிக்க' என்னும் பொருட்டு. திருவைந்தெழுத்தை நினைக்குமுறையும் ஓதுமுறையும் ஒன்றே. ஞானம் விளங்கி முதல்வனைக் கண்டவிடத்தும், பயிற்சிவயத்தான், முன்னர்த்தான் பற்றியிருந்த பாசத்தை உயிர் நோக்கி நிற்குமாதலின், அந்நோக்கை நீக்குதற்கு, அஞ்செழுத் தெண்ணுதல் வேண்டப்பட்டது. அஞ்செழுத்தைக் கணிக்கு முறையிலே ஆன்மா சிவனுக்கு அடிமையாதலை யறிந்து உள்ளத்திலே அஞ்செழுத்தா லிறைவனைப் பூசித்து, உந்தியிலே ஓமித்து, புருவநடுவே தியானித்துச் சிவோகம் பாவனை செய்யின், ஆண்டானடிமைத்திறம் இனிது விளங்குதலின், மலவாசனைமாறும். அவ்வாறு செய்யுமிடத்து உலகைநோக்கிய உயிர்க்கு அதனோடு கலந்துள்ள முதல்வன் தோன்றுவனேயன்றி உலகந் தோன்றாது.

இனி, பத்தாஞ் சூத்திரக் கருத்து ஆயற்பாற்று. முதல்வன் உயிரோடுகலந்து, உயிரேயாய் நின்றவைபோல, உயிரும் தானென்பது வேறு காணப்படாது, அம் முதல்வனேயாய்

ஒற்றுமைப்பட்டு அவன் பணியிலே வழுவாது நிற்பின், ஆணவம், மாயை, கன்மமென்ற மூன்றும் பற்றறக்கழியும் என்பது சூத்திரக்கருத்து. அஞ்செழுத்தை நினைந்து இறைவனைப் பூசித்துப் பின், அவனோடு ஒற்றுமைப்படுதலாலேயே, யானெனதென்னுஞ் செருக்கு அறுமாதலின், அவ்வொற்றித்தல் வேண்டப்படு மென்பதை முதல் அதிகரணத்துள் வற்புறுத்தினர். அங்ஙனம் ஒற்றுமைப் படுதலோடு, அவனருளாலன்றி ஒன்றுஞ் செய்யாது, அவன்பணியில் நிற்பதினாலேயே, மாயையின் காரியமாயமயக்க வாசனையும், ஆகாமிய வாசனையும் ஏற்படாவாகலின், அருள் வழிநிற்றல் இரண்டாம் அதிகரணத்துள் வற்புறுத்தப்பட்டது.

அருள்வழி நிற்பதால், உலகமும் தாமும் இறைவனுடைமை யென்று கருதுதலமைதலின், பிராரத்தம் நுகருமிடத்து, ஆகாமியம் ஏறுவதில்லை. அதுஉடலனுபவமாக வேகழியும். பிராரத்த வினையும் இறைபணி நிற்கும் ஞானிகட்கு வாசனை போல மெலிதாய் வந்து தாக்குவதன்றி, நுகரப்படுதலில்லையாகலான், ஆகாமியம் ஏறி மேலைக்கு வித்தாகாதென்பதை இனிது விளக்கினார். அனற் கட்டுடையார், அனலாற் றுன்புறாமைபோல, இறைவனடியாகிய அச்சினை விட்டு விலகாதார் பிராரத்தத்தாற் பிணிப்புறுமாறில்லையென்றார்.

இனி, பதினோராஞ் சூத்திரப் பொருள் ஆயற்பாற்று. பாசநீக்குமுறை பத்தாஞ் சூத்திரத்துட் கூறப்பட்டது. இருள் நீக்கத்தில் ஒளி விளக்கம் போலப் பாசநீக்கத்தில் அருள் விளக்கம் நிகழும். அதற்குமேல் முற்றிய சிவானந்த விளக்கம் நிகழும். அச்சிவானந்த விளக்கம் பெறுதற்குரிய முயற்சி பதினோராஞ் சூத்திரத்துட் கூறப்பட்டது. இச்சூத்திரக் கருத்து யாதெனில்:—கண்ணுக்கு உருவத்தைக்காட்டித் தானும் அதனைக் காண்கின்ற உயிரைப்போல, முதல்

வன் உயிர்க்குப் பொருள்களை யுணர்த்தித் தானு முணர்ந்து பேருதவி புரிவதைக் கடைப்பிடித்துச் செய்யும் அன்பாலே, சிவானந்தம் விளையும். கண்ணோடு உயிரினறிவானது கலந்து நிற்ப, கண்கண்டதும் உயிர் கண்டதும் பிரித்தறியப்படுமா றின்மைபோல, முதல்வனும் உயிரறிவோடு கலந்து நின்று அத்துவிதமாய் உயிரோடுதானும் பொருள்களை யறிந்துதவு வதே இறைவன் செய்யும் பேருபகார மென்றார். இறைவன் உயிர்க்குப் பொருள்களைக் காட்டினால் மாத்திரம் போதாது; தான் அவைகளைக் கண்டாற்றான், உயிர்காணும். காணு முதவியைக் கருணை மேலீட்டினாலேயே இறைவன் புரிவ தால், அக்கருணையை யுள்ளுவார்க்கு முதல்வன்பால் மிகுதிப் படும் விழைவே, அன்பெனப்படும். அவ்விழைவோடு அத்து விதமாய்க் கலந்திருப்பது சிவானந்தமாதலின், இது இன்ப அன்பெனப்படும். தீயானது, திரியிற்றங்கி விளங்குதல் போல, முதல்வனும் உயிரிற்றங்கித் தொழில் செய்வனென் பது முடிந்தது. இச்சூத்திர முதலதிகரணத்தே, இறைவன் உயிர்கள் அறியும் பொருளை அவற்றோடு கலந்து தானும் அறிந்துதவுகின்றானென்றார். இதற்குக் காரணத்தை முனிவர் இனிது விளக்கினார்.

"விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளி யோடுகூட உருவத்தினுங் கலந்தாலன்றி, கண் அவ்வுருவத் தைக் காண்டலியலாமைபோல, அறிவிக்க அறியும் இயல்பின வாய உயிரும், முதல்வனதுணர்வு தம்மொடு விரவி நின்று தம்மொடுகூடச் சென்று விடயத்தினும் விரவி நின்றாலன்றி அறிவு விளங்கி அதனை யறியும் இயல்பினவல்ல" என்றது காண்க.

உலகத்தையும் தன்னையும் உயிரோடு கலந்து இறைவ னறிவனென்று தெளிக. அங்ஙனம் இறைவன் தன்னை யறி வனேயன்றி யனுபவித்தலில்லை. ஏனெனில், இறைவன் ஒன்

றிலே அழுந்துவதில்லை. தானே இன்பவடிவன், என்பது உய்த்துணரற்பாற்று. இறைவன் எல்லாப் பொருளையும் பொதுவகையால் ஒருங்கே யறிந்து, சிறப்புவகையால் ஆன்மாவினுடனின் றறிவனென்று தெளிக.

உயிர் இறைவனோடு அத்துவிதமாய் நின்று இறைவனருளே விளங்கத் தான் என்ற உணர்ச்சி யிழந்து, ஒரு பொருளை யுணருங்கால், வினைப்பயன் சிவபோகமாய் விளையும். வினைப்பயனை முதல்வனே என்று கொள்ளுவான் எனவும், என்றுகொண்டு உயிர்கள் செய்யுஞ் செய்திக்குத் தக்க பயனை யளிப்பனெனவும் உண்மை யறியற்பாற்று.

இச்சூத்திர இரண்டாம் அதிகரணத்தே பத்தியின் மறவாதேத்த இறைவன் திருவடியினை உயிர் அடையுமென்பது வற்புறுத்தப்பட்டது. அன்புடையார் விரும்புஞ் சிவானுபவ இன்பத்தை இறைவன் நல்குவனென்பது கருத்து. செய்பவர் செய்திப்பயனை வீட்டு நிலையிலுங் கட்டு நிலையிலும் இறைவன் விளைப்பினும், கட்டுநிலையிலே இறைவன் புலனாகாமைக்குக் காரணங் கூறுவார், 'மல விசேடத்தால், ஒளி மழுங்கிய கண்ணிடத்தும், அது நீங்கி ஒளி விளங்கிய கண்ணிடத்தும் வேற்றுமையின்றி ஆதித்தன் சமமாய்நின்றாலும், அவ்வாதித்தன் ஒளிமழுங்கிக் காட்சியில்லாத கண்ணுக்கு மாலை யிருட்டாய்த் தோன்றுவனன்றி, ஒளிவிளங்கிய கண்ணுக்குத் தோன்றுமாறுபோல விளங்கித் தோன்றான்' என்றார். இறைவன் செய்யும் பெருதவியைப் பரமாசாரியார் "மன்னு யிருளை" என்ற வெண்பாவால் அறிவுறுத்தினர். இறைவனது இச்சை செயலறிவின்வழியே உயிரின் இச்சை செயலறிவு முத்தியின்கண் நிலைப்படுதலைப் பரமாசாரியர், தமது வெண்பாக்களாலினிது விளக்கினர்.

இனி, பன்னிரண்டாஞ் சூத்திரப்பொரு ளறிதற்பாற்று. மறவாத பேரன்பால், இறைவன் திருவடியை யணைந்தவன்

முத்தன், செங்கமலமலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது திருவடியை அணையவொட்டாது மறத்தலைச் செய்விக்கும் இயல்புடைய மும்மல அழுக்கை ஞானநீராற் கழுவி, அயரா அன்புடன் முதல்வனை யணைந்தோரோடுங் கூடி, மல மயக்கம் நீங்க, அவ்வன்பரது திருவேடத்தையும் திருக்கோயிலையுஞ் சிவனென வழிபடுவன் என்பதே இச்சூத்திரக்கருத்து. சீவன்முத்தர்க்குப் புறத்தே அறிவு, இச்சை செயல்கள் செல்லுங்கால், அவை எவற்றைப் பற்று மென்பது இதன்கண் விளக்கப்பட்டது. சிவானுபவம் உள்ளத்தே நிறையப்பெற்ற பெரியோரே சீவன்முத்தர். உடம்புள்ள போதே உடம்பினுள் உத்தமனைக் கண்ட அவர்கட்கு அவ்வுடம்பு உலகத்தே வதியுங்காலைப் பிரார்த்தத்தால் அறிவிச்சை செயல்கள் புறம்போந்தகாலை, அவற்றி னியல்பு இன்னவாறுமென்பதே இச்சூத்திர முரைக்கின்றது. அவர்கள் அறிவு சிவஞானத்தைப் பற்றும். அவர்கள்இச்சை அன்பர்கூட்டுறவைப் பற்றும். செயல், வணக்கத்தைப் பற்றும்என்றறிக. முதலதிகரணத்தே, மும்மலங்கள் வாதனைவயத்தாற் பொருந்து மாயின், அவற்றைக் களைதல் கூறப்பட்டது. கன்மமலமானது புண்ணிய பாவங்கட் கேதுவாய் விருப்புவெறுப்பாய்ப் பொருந்தும். மாயாமலம், மண்முதல் மாயை வரையுள்ள தத்துவங்களைக் காட்டும். ஆணவ மலம் சுட்டுணர்வாகிய திரிபுணர்ச்சியைத்தரும். பிாரத்தவினை நுகர்ச்சிக்கட் சென்ற தற்போதத்தால் விருப்பு வெறுப்புத் தோற்ற மேற்படும். அதனாற் சுட்டறிவுளதாம் என்றறிந்து சிவஞானத்திலேஉறைத்துத் தற்போத மிழத்தலே இம்மலங்களைத் துடைக்கும் வழியாகும்.

சிவபத்தரல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவ ராகலான், சிவனன்பரிணக்கமே வேண்டு மென்பது இரண்டாவது அதிகரணத்தே வற்புறுத்தப்பட்டது. சிவபத்தரைப்

பிராரத்தவினை வாதியாமையின் அவர் இணக்கமே பிராரத்தத்தை வெல்லும் உபாயமாதல் காண்க.

இச்சூத்திர மூன்றாம் அதிகரணத்தே, திருவேடத்தினியல்பும் திருக்கோயிலினியல்பும் விளக்கப்பட்டன. நான்காம் அதிகரணத்தே, அவ்விடங்களிலே முதல்வனை வழிபடுதலின் சிறப்பு உணர்த்தப் பட்டது. திருவேடத்தினியல்பு கூறுமிடத்து, அப்பமூர்த்திகளின் பெருந்தவவடிவத்தையே முனிவர் அதற்கெடுத்துக் காட்டாக மொழிந்தார்.

முதல்வன் எங்கும்நிறைந்த பரம்பொருளாயினும், இவ்விடங்களில் தயிரில் நெய்போலவும், ஏனையிடங்களிற் பாலில் நெய்போலவும் இருத்தலின், சிறப்பிடங்கள் விதந்தோதப் பட்டன. திருக்கோயிலின் கண்ணே இறைவன், அதுவே தாமெனக் காணமாட்டாதார்க்கு மந்திர சாந்நித்தியமில் வழி விளங்காது நின்று, உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் இனிது விளங்கித் தோன்றுவன். எல்லாப்பொருளிலும் இறைவன் கலந்திருப்பினும், அக்கலப்பினைப் புலப்படுத்தி அன்புவிளைவிக்குமிடங்களிலெல்லாம் அவனை வழிபடுக. பிராரத்தவாதனை பற்றறக் கழிதற்கு ஞானிகளின் கூட்டுறவே இன்றியமையாதது.

எக்காலத்தும் இறைவழிபாடு உயிர்க்கு இன்றியமையாததென்பதைத் 'தன்னையறிவித்து' என்ற திருவெண்பாவில் வற்புறுத்தியருளினர். இந்நூல் சகலர்க்கே யென்பதைப் பரமாசாரியார் இந்நூலினிறுதிச் செய்யுளால் விளக்கியருளினர்.

# சிவஞானபோதப் பொழிப்புரை

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

உரை:—அருள் வடிவாகிய கல்லாலமர நிழலின்கண் எழுந்தருளியிருந்து, தனது மாணவர்க்கு மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், மேன்மேலருள் செய்தற் பொருட்டு, சுயம்பு மூர்த்தியாகிய பிள்ளையாரது அறிவாற்றல், செயலாற்றல் என்ற இரண்டு திருவடிகளை மெய்யன்பர் தலைமேற் கொள்ளுவர்.

குறிப்பு:—கல்லாலமர நிழலின்கண் திரு நந்திதேவர் முதலியோர்க்கு ஞானம் உபதேசித்தமை வெளிப்படை. 'அருளிய' என்பதற்கு அவர் அருளாற் பிறந்த என்பாரு முளர். இங்கே, அருளிய=அருள்செய்ய. பொல்லார்=பொள்ளார்=உளி முதலியவற்றாற் போழ்ந்து செய்யப்படாதவர். திருவெண்ணெய் நல்லூரிலே, விநாயகப் பெருமான் சுயம்பு மூர்த்தியாயுள்ளார். புனைதல்=மேற்கொண்டு தமது அறிவு செயல் அவற்றுள் அடங்கப்பெற்று நிற்றல்.

---

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்உணர்வார்
எம்மை யுடைமை யெமையிகழார் - தம்மை
உணரார் உணரார் உடங்(கு) இயைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

உரை:— (உடைமைப் பொருளாகிய) தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையனாகிய தலைவனை உணர்ந்தவர்கள்,

தமக்கு உடைமையாக எம்மை உடையவர்களாதலின், எம்மை (அன்பாற் பாராட்டுவாரன்றி) இகழமாட்டார். தம்மை உணராதவர்கள் தலைவனையும் உணராதவர்களே. அவர்கள் ஒருங்கு சேர்ந்து தம்முள் ஒற்றுமைப்படமாட்டாராகலான், அவர்களது புறங்கூற்று மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம்.

குறிப்பு :—கொள்ளாம்=உடன்பட்டுக்கொள்ளமாட்டோம்.

---

## முதற் சூத்திரம்

அவன் அவள் அது வெனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்(து) உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

என்பது சூத்திரம். என்னுதலிற்றோவெனின், சங்கார காரணனுள்ள முதலையே முதலாக வுடைத்து, இவ்வுலகம் என்பதுணர்த்துதல் நுதலிற்று.

முதற்சூத்திரப் பொருள் :—அவன், அவள், அது என்று பகுக்கப்படும் உலகத்தொகுதி, (தோன்றுதல், நிலை பெறுதல், ஒடுங்குதல் ஆகிய) மூன்று தொழிலுடைமையால், அது ஒருவனாற்றோற்றுவிக்கப்பட்டு, நிலை பெறுவதேயாம். அது தான் ஒடுங்குதற்குக் காரணமான கடவுளாலேயே தோன்றுவது. ஆணவமலம் தீர்ந்து ஒடுங்காமையால், அது (ஒடுங்கியதோடு நில்லாது மீளவும்) உண்டாவது. அதற்கு (ஒடுக்கமாய் முடிவைச் செய்யும்) அந்தக் கடவுளே ஆதியுமாகின்றான் எனத் தருக்க நூலறிந்தோர் கூறுவர்.

கருத்துப் பொருள் :—ஒடுங்குதற்குக் காரணமாயுள்ள முதற் கடவுளையே இவ்வுலகம் தனது தலைவனாக வுடையது.

குறிப்பு :—அவை=தொகுதி ; திதி=காக்கப்படுவது. ஒடுங்கி=ஒடுக்குங் கடவுள், ஒடுங்கியினால் உளதாம் என்பது. மலத்தால்=ஆணவமலம் உண்மையால், 'மலத்து' என்பதை

